உ

சிவமயம்

ஆதிசங்கராச்சாரிய சுவாமிகள்

வடமொழியிற் செய்த

# விவேக சூடாமணி

(சாரம்)



வெளியீடு :

அ. செல்லத்துரை

சிவதொண்டன் நிலையம்

செங்கலடி, இலங்கை.

உ
சிவமயம்

ஆதிசங்கராச்சாரிய சுவாமிகள்

வடமொழியிற் செய்த

# விவேக சூடாமணி

( சாரம் )



வெளியீடு :

அ. செல்லத்துரை
சிவதொண்டன் நிலையம்
செங்கலடி, இலங்கை.

1983 2 ஆம் பதிப்பு (திருத்தப்பெற்றது)



விலை: ரூபா 15/=

வெளியீடு:

அ. செல்லத்துரை
சிவதொண்டன் நிலையம்,
செங்கலடி. (கி. மா.)
இலங்கை.

அச்சுப்பதிவு:

கு. வி. அச்சகம்
386, மணிக்கூட்டு வீதி,
யாழ்ப்பாணம்,

முழுதும் உண்மை

ஒரு பொல்லாப்புமில்லை



எப்பவோ முடிந்த காரியம்

நாமறியோம்

“தேவருந் தேடியே தேராத் திருவடியை
ஏவருங் காணவே யிவ்வுலகில் — பூவார்
கொழும்புத் துறையிற் குருவாகி வந்து
தொழுதுய்யச் செய்தாய் துணை”

# பதிப்புரை

ஆதி சங்கரர் சநாதன தர்மத்தைப் பாரத நாட்டிலே நிலை நிறுத்துவதற்காகப் பல முயற்சிகளைக் கைக்கொண்டார். அவற்றுள் ஒன்றே பிரமசூத்திரபாடியம், உபநிடத விளக்கவுரைகள், பகவத்கீதை உரை முதலிய தத்துவ விளக்கங்களை எழுதியதாகும். இவ்வுரைகளை முழுதாகக் கற்றல் சாதாரண மனிதனால் இன்றைய வாழ்க்கை நிலையில் முடியாத காரியமாகும். இப்பாடியங்களைவிட சிறுசிறு நூல்களாகப் பல பிரகரணங்களும் அவர்களால் ஆக்கப்பட்டுள்ளன. இவற்றை யாவரும் சில நாள்களில் கற்றுமுடித்து விடலாம். அப்படியான பிரகரண நூல்களுள் முதலாவதாக இயற்றப்பெற்றது 'விவேக சூடாமணி' என்னும் ஞான நூலாகும்.

சூடாமணி தலைமீதில் அணியும் இரத்தினம் ஆகும். அது ஆபரணங்களுள் சிறந்தது. ஆத்மானாத்ம விவேகத்தை விளக்குவதில் எல்லா நூல்களிலும் உள்ள விவேகத்துக்குச் சிரம்போல் விளங்குவதால் இதற்கு விவேக சூடாமணி என்னும் பெயர் பொருந்துவதேயாகும் இந்நூலில் 580 சுலோகங்கள் உள. இது குரு சீட சம்பாஷணைப் பாணியில் அமைந்துள்ளது. ஆத்ம தத்துவத்தையும் அதை அறிந்து உய்யும் நெறியினையும் பல எடுத்துக்காட்டுக்களுடன் ஆணித்தரமாக விளக்குகின்றது. சுருங்கக் கூறின் எவ்வாறு சைவத் திருமுறைகளின் பிழிவாகச் சிவஞானபோதம் உளதோ அவ்வாறே உபநிடதங்களின் பிழிவாகவே இந்நூலுமுளதாகும். ஞான நாட்டமுடைய விவேகிகள் யாவராலும் போற்றப்பட்டுள்ளது. தமிழ் மொழியில் ஸ்ரீரமண மகரிஷிகளும், சென்னை ஸ்ரீ இராமகிருஷ்ண மடத் தலைவரும், ஆங்கிலத்தில் சுவாமி சின்மயானந்தரும் வேறு சில மேனாட்டறிஞரும் இதனை விளக்கியிருக்கின்றார்கள்.



இதன் தமிழாக்கம் ஒன்று செய்யுள் நடையில் பிரம்மஸ்ரீ பிக்ஷு சாஸ்திரிகளால் முன்னரே வெளிவந்துள்ளது. செய்யுள்கள் எல்லாராலும் எளிதில் கற்றறிய முடியாது. அவற்றிற்கு உரைகளும் இன்றியமையாதனவாகும்.

ஆன்ம ஈடேற்றம்பெற விழையும் யாவரும் படித்துச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடுதற்கு வாய்ப்பாகவே இது உரைநடை வடிவில் எங்கள் குருநாதன் யோகசுவாமிகளின் திருவுளப் பாங்கின்படி 1935 ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் கமலாசனி அச்சகத்தில் வெளியிடப்பட்டது.

அக்காலையில் சுவாமிகள் தந்திருக்கையால் தனக்குத் தந்ததென்று, மல்லாகம் திரு. ஆறுமுகம் சுவாமிநாதன் அவர்கள், அருமையோடும் பெருமையோடும் பேணிப் பாதுகாத்து வைத்திருந்த ஒரு பிரதியை எம்மிடமளித்து, இவ்வெளியீட்டுக்கு ஊக்கமளித்தார்கள்.

தற்போது, படிக்க ஆவலுறும் அன்பர் தேவைக்கு இதன் பிரதிகள் கிடைப்பதரிதாகையாலும், சிவதொண்டர் முயற்சி மறைந்தழிந்து போகாதிருப்பதற்காகவும் இதனைப் புதுக்கியும் திருத்தியும் வெளியிடுகின்றேன்.

துயர் இலங்கும் உலகில் இருந்து விடுபடுவதற்கு ஆன்றோர் பற்பல வழிவகைகளைக் காட்டியுள்ளார்கள். "ஒன்றதுபேரூர், வழி ஆறு அதற்குள" எனத் திருமந்திரம் கூறாநிற்கும். எல்லா வழிகளும் உண்மையை நாடியே செல்கின்றனவாயினும் யாவரும் எளிய இனிய நெறியாகக் கைக்கொள்ளக்கூடிய ஒன்றினையே அவாவுறுகின்றனர். நுண்ணறிவால் செய்யும் வழிபாடே சாலச் சிறந்த ஒன்றென்பர் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும்.

தோலுடையான் வண்ணப் போர்வையினன்
சுண்ணவெண்ணீறு துதைந் திலங்கும்
நூலுடையான் இமையோர் பெருமான்
நுண்ணறிவால் வழிபாடு செய்யும்
காலுடையான் கரிதாய கண்டன்
காதலிக்கப்படும் காட்டுப் பள்ளி
மேலுடையான் இமையாத முக்கண்
மின்னிடையா ளொடும் வேண்டினனே.

என்பது அவர் வாக்கு.

இதனையே சாத்திரங்கள் ஞானபூசை என்னும். அருணந்தி சிவாசாரிய சுவாமிகள்,

ஞானநூல் தனைஓதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல், தான்கேட்டல் நன்றா
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞானபூசை

என இப்பூசையின் சிறப்பினை நன்கினிது எடுத்து நலமுற விளக்கியுள்ளார்.

அங்ஙனமே, இந்நூலும் ஞான பூசைக்குரிய ஞான நூலாகவே கருதி வெளியிடப்படுகின்றது. தெய்வ உபாசனை, சிவசிந்தனை, சிவதொண்டு முதலிய சாதனைகளால் மனம் ஏகாக்கிர சித்தத்தைப் பொருந்தும். அவ்வண்ணம் பொருந்திய சித்தத்தை உடையோரே இந்நூல் கற்றற்கு அதிகாரிகளாவர். அன்னவர்களின் முன் இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன். கற்றுத்தெளிந்து கதிசேருவார்களாக.

இந்நூல் இவ்வண்ணம் வெளிவரத்தோன்றாத் துணையாயிருந்த திருவருளையும் குருவருளையும் வணங்கி, அழகாக அச்சிட்டுதவிய கு. வி. அச்சகத்தாரை வாழ்த்தி பல வழிகளில் உதவிய அன்பர்களுக்கும் நன்றி கூறுகிறேன்.

# இந்நூலின் சாரம்

சீவர்களுள் மானிடப் பிறவியே மாண்புடையது. அவருள்ளும் முத்தியை விரும்புவோர் சிறந்தவர். முத்தி நாட்டத்தோடு சீவன் முத்தர்களாகிய மகா புருஷர்களைத் தேடி அவர்களைச் சரணடைபவர் பெறுதற்கரிய பெரும்பேறு பெற்றோர் என்றே சொல்லலாம். திருவருட்டுணையினாலேயே இப்பேறு மூன்றும் வாய்க்கப் பெறுவதாகும். சாத்திரங்களைப் படித்தாலும், தெய்வங்களை வழிபட்டாலும், பலவிதமான கருமங்களைச் செய்தாலும் ஆத்மாநாத்ம விவேகம் இல்லாமல் முத்தி கிட்டாது. ஆகையால் ஒருவன் தகுந்த குருவையடைந்து, அவரது உறுதி மொழிகளால் ஈடேறவேண்டும். வேதத்தை நன்றாய் உணர்ந்தவரும், 'பாவமில்லாதவரும்', ஆசைவயப்பட்டு நலியாதவரும், பிரம்மஞானியும், இயல்பாகவே ஏனைய சீவர்களில் கடல் போன்ற கருணையுடையவரும், தம்மைச் சரணடைந்த நல்லோர்க்கு உளங்கலந்த உறவினரும் எவரோ அவரே சிறந்த குரு. அத்தகைய குருமார்கள் மனவமைதியும், உலகிற்கு உதவும் சீலமும், பயங்கரமான பிறவிக் கடலைத் தாங்கள் தாண்டியவர்களாகவும் இருக்கிறார்கள். இப்படியானவர்கள் முற்காலங்களிற்றான் இருந்தார்கள்; தற்காலத்தில் காண்டலரிது என எண்ணுதல் வீண். அவர்கள் எக்காலங்களிலும், இலை மறை காய்போல உளர். அவர்களைக் கண்டுகொள்ள நமக்குப் போதிய அறிவும் அவாவும் திருவருளும் இல்லாததே குறையாகும். எங்கள் சுவாமிகளில் இந்த இலக்கணங்களெல்லாம் அமைந்திருந்தன.

இனி, முத்திக்கு வித்து மோகத்தை முனிதல்; பின்னர் பற்றறுத்துத் தொண்டாற்றுதல். அதன்பின் குருவினைச் சரணடைந்து, உபதேசம் பெற்று, அதனைச் சிந்தித்து, இடையீடின்றித் தியானம் பழகி இறுதியில் சமாதி அடைதல்.

சாதி, குலம், சேர்க்கை, கோத்திரம் ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டதும், பெயர் வடிவம், குணம், குறி, குற்றம் அற்றதும், இடம், பொருள், காலம் ஆயவற்றைக் கடந்ததும் ஆகிய பிரமமே தான் என்று புத்தியில் அநுசந்தானம் செய்ய வேண்டும். கேட்டலிலும் சிந்தித்தல் சிறந்தது. ஆத்தும தத்துவத்தை உணர்ந்து சித்தத்தில் நிலைநிறுத்தல் அதனினும் சிறந்தது. வாக்கை மனத்திலும், மனத்தைப் புத்தியிலும், புத்தியை சாட்சியான தன்னிடத்திலும், தன்னையும் குணங்களற்ற பரிபூரணுத்மாவிலும் முறையே ஒடுக்கின் ஒருவன் ஒப்பற்ற உபசாந்தம் உறுகிறான். இந்நிலையில் தான் ஏகனுகி தனது மனம் வாக்குக் காயங்களின் செயலனைத்தும் சிவச்செயலாகக் காண்பதில் தவறாதும், மறவாதும் நிற்பானுயின் அவன் சிவமேயாம். அவன் பார்ப்பதெல்லாம் பரமாகும்.

ஞானத்தைப் போதித்துச் சாதனைப்படுத்த வந்த நூலாகையால், சரியை கிரியை ஆதிகள் இதில் கூறப்படவில்லை. தாயுமான சுவாமிகளும்,

"எனக்கினிச் சரியை யாதிகள் போதும்
யாதொன்று பாவிக்க நான் அதுவாதலால்
உன்னை நானென்று பாவிக்கின் அத்துவித
மார்க்க முறலாம்"

என்று கூறுகின்றார். இதனையே சிவோஹம், ஸோஹம், ஏகிபாவம் என்பர் பெரியோர்.

"காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே"

— அப்பர்

"வேதாந்தம் சித்தாந்தம் வேறாகக் காணோம்,
வேதாந்தம் சித்தாந்தம் ஒன்றாகக் காண்போம்"

— நற்சிந்தனை

உ
சிவமயம்

சங்கராச்சாரிய சுவாமிகள் அருளிச்செய்த

# விவேக சூடாமணி

## காப்பு.

சங்கராச் சாரியனார் தண்ணருளா லேதந்த
துங்கமுறு சூடா மணிதன்னை — இங்குதரக்
கந்தனுக்கு முன்பிறந்த கற்பகத்தின் நற்கமலக்
கந்தமலர்ப் பாதமென்றுங் காப்பு.

## பயன்.

காக்குங் கடலிலுறு தெப்பம்போ லேயிந்நூல்
சேர்க்குமே நல்ல திருத்துறையில்—நீர்க்குமிழி
வாழ்வை நினையா மனத்தையுமே தந்திடுமால்
தாழ்வில்லை யெங்களுக்குத் தான்.

## அவையடக்கம்.

தானான தன்மைதனைத் தந்திடுமா லிந்நூலை
மாணாரு மேனேரு மதிப்பரே—நானு
பொறிவழியிற் போயுழலும் புன்மையீர் போற்றி
நெறிவழியில் நிற்பீர் நிறைந்து.

# சாரம்

## மங்களா சரணம்.

1. வாக்காலும் மனத்தாலும் அறியப்படாதவரும், வேதமுடிவின் பொருளானவரும், உலகத்திற்கோர் முதல்வரும், ஞானவடிவினரும் ஆகிய கோவிந்தரை அடியேன் வணங்குகின்றேன்.

## பிரம்ம நிட்டையின் மகத்துவம்:

2. மானுடயாக்கையைப் பெறுதலரிது; பெற்ருலும் ஆணுகப் பிறத்தலரிது; பிறந்தாலும் ஓர் அந்தணனுவது அரிது; அதனினும் சமயநூற் பற்றுடையவனுதல் மிக அரிதாம்; அதனினுமரியது முயர்ந்ததும் ஞானநூற் பயிற்சியுடையனுதலாம். சித்து வேறு சடம் வேறெனப் பகுத்தறிந்து, அவ்வறிவின் பயனுகிய உண்மையை உணர்ந்து, உணர்ந்த பொருளான ஆத்மாவும் பரமாத்மாவும் ஒன்றெனக் கண்டு அவ்வுண்மை யின்பத்தில் எஞ்ஞான்றும் திளைத்திருத்தலோ அம்மம்ம!! எல்லாவற்றிலும் சிறந்ததொன்றேயாம். இவ்வாறு தனிச்சிறப்புள்ள நிலையை அடைதலுமோ பல்லூழி காலமாக எடுத்த பிறவிகடோறும் உஞற்றிய நல்வினையின் பயனுலாமென்க.

3. கடவுளின் பேரருளாற் பெறப்படுவனவாய் ஆன்மாக்கள் பெறவேண்டியவற்றுள் பெருஞ் சிறப்புள்ளனவாய பொருள்கள் மூன்றுள. அவை முறையே, மானுடயாக்கையும் வீடுபேற்றின் விழைவும், மெய்ஞ்ஞானியின் அருட் காப்புமேயாம்.



4. முன் வினைப்பயனுக, ஓர் மானுடயாக்கையைப்பெற்று ஆடவனுகி, ஞானநூலுணர்ச்சியுள்ளானுய வொருவன் தனது விடுதலையின்கண் விழைவில்லானேயாகில் அவன் பொய்யாயழிந்து போகும் உலகப்பொருள்களினுலே தாக்கப்பட்டுத் தன்னைத்தானே கொன்றவனுகின்ருன்.

5. மேலான மானிடத்துதித்த ஒருவன் தான் பிறந்ததன் நோக்கத்தை ஆராய்ந்து அதனைப் பெறமுயலானுயின், அவனிலும் சாலச் சிறந்த அறிவிலி வேறெருருவனு முண்டுகொல்!

6. சாத்திரங்கள் பல பேசினுலென்? யாகங்கள் பல புரிந்தாலென்? கடவுளை இடையருது வணங்கினுலென்? தன்னையும் பரமாத்மாவையும் ஒன்றெனக்காணும் மெய்யுணர்வு பெற்ருலன்றி நூறு பிரம கற்பங்கள் சென்ருலும் ஒருவன் வீடுபேறெய்தலரிதென்க.

7. பிறப்பிறப்பில்லாப் பேரின்ப வாழ்வைச் செல்வத்தின் பெருக்கால் ஒருவன் பெறலரிது. வேதங்களு மிதன் உண்மையை விரித்துரைக்கின்றன. ஆதலால், புண்ணிய வினைகளும் ஏனை நல்லறங்களும் வீடுபேருய பெருஞ்செல்வத்தைப் பெற ஏதுவானவையல்ல.

## ஞானத்துக்கு வழி.

8. அறிவுடையாளெருவன், மாயாசம்பந்தமான புறப்பொருட் பற்றுக்களை நீக்கி, ஞானகுருவையடைந்து, அக்குருவின் உபதேச உண்மை வழி நின்று வீடுபேற்றைப் பெற முயலவேண்டும்.

9. அழிதன் மாலையனவாய புறப்பொருள்களிலும் புண்ணியச் செயல்களிலும் பற்றற்ற நிலையை அடைந்தாஞெருவன் மெய்யுணர்வின் வழிச்சென்று பிறப்பிறப்பாகிய பேராழியில் மீட்டும் மூழ்காது தன்னைப் போற்றிக்கொள்ளல் வேண்டும்.

10. பரமான்மாவைத் தன்னுட் கண்டின் புறச் சாதனை செய்வான்புக்க அறிஞன், வினை விளைக்குஞ் செயல்களிற் பற்றற்றவனாய், பிறப் பிறப் பென்னும் பெருந்தளையை அறுக்க முயலக் கடவன்.

11. நல்வினைகளைப் புரிவதால் மனத்தூய்மை பெறலாமன்றி, கடவுளைக் கண்டின்புறத்தகும் நல்லொளியைப்பெற முடியாது. மெய்யுணர்வோ பகுத்தறிவால் மாத்திரம் பெறப்படுவ தொன்றன்றி, கோடிக்கணக்கான நல்வினைகளினால் எய்தப்படுவ தொன்றல்ல.

12. விரிந்த அறிவின் பயனாக, கயிற்றைப் பாம்பெனக் கொண்ட திரிபுணர்ச்சி நீங்கும். நீங்க, மத்த மனத்திலே பழுதையாகிய பாம்பினால் உண்டாய பெரும் பயமும் துன்பமும் ஒழியும்.

13. மெய்யுணர்வடைந்த ஞானிகளின் திருவாய் மொழிகளை மன வொருமைப்பாட்டுடனிருந்து தெளிந்து உண்மையை அறியலாமன்றி, கங்கையிற் படிந்தும் அறம்பல புரிந்தும் மூச்சை அடக்கியும் அது பெறற்பால தொன்றல்ல.



## அதிகாரி நிரூபணம்

14. மெய்யுணர்வைப் பெறமுயலுந் தொழில் நன்மையாய் முடிதல், அதைப்பெற முயலும் ஆன்மாவின் பக்குவ நிலையைப் பொறுத்திருக்கிறது. காலம், இடம், பொருள் என்பவையெல்லாம் இம்முயற்சி கைகூடத் துணைபுரியு மேதுக்களாம்.

15. உண்மைப் பொருளான கடவுளின் திருவருளை நாடிய ஒருவன், கருணையங்கடலாய பரம் பொருளின் உண்மைகளை அறிந்தவனாய் ஒரு குருவைத்தேடி, அவர் திருவாய்மொழிகளை என்றுஞ் சிந்திக்கக் கடவன்.

16. கடவுளின் திருவருள் பதியும் பக்குவமுடையவனே, ஞான நூற்பயிற்சி மிக்கானாய், அந்நூல்களிற் கூறப்பட்ட உண்மைகளைத் தடைவிடைகளால் நிலைநிறுத்தக்கூடிய அறிவுள்ளவனாயிருத்தல் வேண்டும்.

17. சித்தும் சடமுமாய இருவகைப் பிரபஞ்சங்களையும் நன்கு பகுத்தறிந்தவனாய், சடப் பொருள்களிற் பற்றற்றவனாய், சாந்தமாதி நற்குணங்கள் தோயப்பெற்றவனாய், வீடுபேற்றின் கட் பேரவா வுடையவனா யுள்ளாஞெருவனே கடவுளையறியும் பக்குவன்.

## நால்வகைச் சாதனைகள்

18. கடவுளிடத்துக் கொண்ட அன்பானது வளர்வதற்கு நான்கு வழிகள் உள்ளன வென்றும்

அவையில்வழி, அன்பு வளர்ந்தோங்காது மடிந் தழியுமெனவும் ஞானிகள் வழங்கியிருக்கின் றார்கள்.

19. அந்நான்கு வழிகளில் சித்தினதும் சடத் தினதும் உண்மையியல்புகளை அறிதல் முதலா வதென்றும், இம்மை மறுமைப் போகங்களை வெறுத்தல் இரண்டாவதென்றும், சாந்த மாதி யான அறுவகை நற்குணங்களைப் பெறுதல் மூன் றுவதென்றும், வீட்டின்பத்திலே தீவிர காதல் கொள்ளல் நான்காவதென்றுங் கட்டளை தந்தார்கள்.

20. உண்மையான சித்துப்பொருள் கடவு ளெனவும், சடப்பொருள் உலகமெனவும் அறியும் திடசித்தம் எப்போ உதிக்கின்றதோ அன்றுதான் சித்தும் சடமுமாகிய பொருள்களைப் பகுத்தறியும் விவேகம் தோற்றியதெனச் சாற்றலாம்.

21. காட்சியளவையாலும், சுருதிப் பிர மாணங்களாலும், ஏனைய ஏதுக்களாலும், இந்திரி யங்களாலும் அனுபவிக்கப்படும் இன்பங்கள் எல் லாம் நின்றுழி நில்லாதழியும் பெற்றியன வென் றறிந்து, அவற்றை நீக்க முயலும் ஆசையே உள்ளத்துறவு அல்லது வைராக்கியம் எனப்படும்.

22. ஐம்புல நுகர்ச்சியால் வரும் ஈனத்தை யறிந்து, அவற்றின் பற்றைநீக்கி, தான்மேற் கொண்ட இலக்காகிய பரத்தை அறிவதிலேயே ஊன்றி நின்று அதனிடத்து மனதை ஒன்றச் செய்தலே சமம் எனப்படும்.



23. மனம் புத்தி சித்தம் அகங்காரம் என் னும் அந்தக் கரணங்களையும், மெய் வாய் செவி என்ற புறக்கருவிகளையும் புலனுகர்ச்சிகளிற் செல்லவிடாது தடுத்து, அவற்றை ஆட்படுத்தலே தமம் அல்லது இந்திரிய நிக்கிரகம் எனவும் பெறப்படும். புறப்பொருள்களாற் றுக்கப்படாது மனம் அடங்கியவிடமே உபரதி அல்லது ஐம்புல வடக்கம் எனப்படும்.

24. எவ்வித துன்பங்கள் வந்து நலிக்கினும் அவற்றை நீக்க வேண்டி அவாவாது பொறுத்தும், அவ்வாறு பொறுக்குங்கால் அவற்றின் வேகத்தால் நலியாது சலனமின்றி யிருத்தலுமே திதிக்ஷை அல்லது சகித்தல் எனப்படும்.

25. ஆசாரியனும் ஞானநூல்களும் கூறும் பொருள்களைத் திரிபற வுணர்ந்து, அவற்றின் உண்மைகளைநாடி, அவ்வுண்மைகளைப் பத்தியோடு கடைப்பிடித்தலே சிரத்தையெனப்படும். இப் பத்திமார்க்கமே உண்மைப் பொருளான கடவுளை யறிதற்கேற்ற வழியாம்.

26. இயல்பாகவே தூய்மையான மெய்ப் பொருளை மனதால் நினைக்கின்ற வளவேயன்றி, இடைவிடாது ஊன்றிச் சிந்தித்திருத்தலே சமா தானம் எனப்படும்.

27. ஆணவமாய இருட்படலப் பாசத்தாற் பெறப்படும் கட்டுக்களாகிய, யான் எனது என்னும் அபிமானங்களினின்றும் நீங்கி ஆன்மா தன்னி யல்பை யுணர்ந்து, அந்தத் தனிநிலையை யடைய விரும்பும் விருப்பமே முமுட்சத்துவம் எனப்படும்.

28. அந்தத் தனிநிலையைப் பெறுதற்கண் கொண்ட நாட்டம், மந்ததர முள்ளதேயாயினும் தீவிரதரமுள்ளதேயாயினும் வைராக்கியமாகிய உள்ளத்துறவு சமம் முதலிய சோபான முறைகளினால் மேலேறியும், ஆசாரியன் திருவருளால் போற்றப்பட்டு வரினுமே, நற்பயனைத் தரவல்லது.

29. உலகப் பற்றைத் துறந்து இன்பநிலையான விடுதலையின்கண் ஒருவன் கொண்ட வேகத்தினளவெவ்வளவோ அவ்வளவே அவன் சமம் தமம் ஆதி சாதனைகளாற் பெற்ற பலனென்க.

30. இந்த வேகத்தினளவு ஒருவனுக்கு மந்தரத்தினளவிலேயே நிற்பின் அவன் செய்யும் சமம் தமம் ஆதிச் சாதனைகளெல்லாம் (கானல் நீர் போல) தோற்றக்காட்சியி னளவாகவே முடியும்.

31. வீடு பேற்றிற்கு வழிகாட்டும் ஏதுக்களில் அன்பே தலைசிறந்தது. தன்னியல்பை யுணர்ந்து, தன்னை யுடையானாகிய தலைவனையுமுணரும் நாட்டமே அன்பெனப்படும்.

32. இன்னொருசாரார் தன்னியல்பாகிய உண்மையை யறியத் தலைப்படும் அவசரமே அன்பென்பர். மேலே கூறப்பட்ட நல்லிலக்கணங்களுடன் பரம்பொருளின் சொரூப நிலையை நாட முயலும் பக்குவன் தன்னைப் பாசபந்தத்தினின்றும் நீக்கி அம்மெய்யொளியின்கட் செலுத்தவல்ல ஓர் நல்லாசிரியனை யடைதல் வேண்டும்.



## குரு இலக்கணம்

33. ஞானநூல்களைக் கற்றவனாய், பாவ சிந்தனை யில்லாதவனாய், ஆசையாகிய சூறையாலலைக்கப்படாதவனாய், தன்னைப் பரம்பொருளிடத்தே கையடையாக வீந்தவனாய், சாந்தனாய், மாசுபூத்த நெருப்புப்போல உலகப்பற்றறுத்தவனாய், எல்லை காணாக் கருணையங்கடலாய், மெய்யன்புடன் தன்னடிகளை வணங்குமடியாருக்குத் தண்ணளிகாட்டுந் தந்தையாய் உள்ள;

34. ஒரு நல்லாசிரியனையடைந்து, அன்பால் வணங்கி, திருமுன்பே நின்று, வீழ்ந்தும், வணங்கியும், அடிமைத் தொண்டாற்றியும் அவர் கருணைக் கிலக்காகியபின், அவரிடந் தானறிய வேண்டியவற்றைக் கேட்கக் கடவன்.

35. என்னிறைவனே! வணங்குவாரிதயத்துள்ள வள்ளலே! கருணையங் கடலே! வணக்கம். சாவாவமிர்தமன்ன தண்ணியல் கொண்ட தேவரீரின் திருக்கடைக் கண்ணருளால், பிறப்பிறப்பாகிய பேராழியிற் பட்டுத் துயருறுவேனைக் காத்தல் வேண்டும்.

36. காட்டுத்தீபோன்ற உலக போகங்களாற் றுக்கப்பட்டு, தீவினையான சூறையாலலைக்கப்பட்டுத் திகைத்தவனாய், துணையாவார் யாருமின்றித் தேவரீரையே புகலிடமாக வந்தடைந்தேன். எம்பெருமானே! மரணவேதனையினின்று மென்னைக் காத்துக்கொள்ளுக.

— 2

37. பெருமானே! பிறர்வேண்டாது, தானே சரம் அசரம் என்னும் இருவகைப் பிரபஞ்சத் திற்கும் புத்துயிரும் புதுநலனுமளிக்கும் இளவேனி லொப்ப, பிறப்பிறப்பென்னு மாழியுட்படாது முத்திக் கரையேறிய பெருந்தகையாளர், கைம் மாறு கருதாது, தாம் பெற்றவின்பம் இவ்வையக மும் பெறுவான் முகிழ்த்த கருணையால் எளியே மாகிய எம்மையும், அக்கொடும்பவப் பௌவத் தைத் தாண்டுவிக்கவல்ல தெப்பங்கள் போன் றிருக்கின்றார்கள்.

38. ஐயனே! அவ்வாறு தண்ணளிபூண்ட பெருந்தகையாளர், பிறர் இன்னல்களைக் காணப் பொறாராய், தாமே யவற்றை நீக்க, முன் வருவர். எடுத்துக்காட்டாக, சுடுகதிர்க் கற்றை களால் உலகை வாட்டிய ஆதவன் வெம்மையை, சந்திரன் தன் அமுதகிரணங்களால் ஆற்றித் தண் ணருள் செய்கின்றானன்றே!

39. வரம்பிலின்பமே! இன்பவடிவினராகிய பரத்தினோடொன்றி அவரருட்டேனிற்றிளைத்து, குடத்தினின்றும் பாயும் நன்னீர்போல, தங்கள் திருவாயினின்றும் மலர்ந்து பாய்வதும், எளியேன் செவிகட்கின்பம் பொழிவதுமாய, தூய, குளிர்ந்த திருவாய் மொழிகளால் என்னை முழுக்காட்டி என் பிறப்பிறப்பாகிய வெம்மைப் பற்றையறச் செய்து வைப்பீராக. உம்முடைய அடியவராகக் கடைக்கணிக்கப்பட்டு உமது கடைக்கட் பார் வைக்கேனு முரித்தாக்குப்பட்ட பெற்றியரன்றோ பெருஞ்செல்வர்கள். ஆதலின் ஐயனே! இந்த



உலகத்தையும் அதைச் சூழ்ந்திருக்கும் மயக்கம் துன்பமாதிச் சேட்டைகளையும் விட்டு போக வேண்டிய மெய் நெறி யிதுகாண்டியெனக் காட்டி என்னை அடிமைகொண்டருள்வீராக.

40. தோற்றன்மாத்திரையான உலகக் கடலைக் கடக்கும் நெறியையேனும் என் ஊழின் றிறனையேனும், நான் பற்றியொழுகும் முறைகளை யேனும், அறியாத எளியனாகிய எனக்கு, பெரு மானே! கருணையால் வெளிப்போந்து சுழன்று சுழன்று வரும் உலக துன்பங்களைத் துடைத்தற்கு வழியிவையெனப் புகன்றருளுவீராக.

41. காட்டிலே நெருப்புப் பற்றியதுபோல, துன்பங்களாலிடர்ப்பட்டுக் குருவருளை நாடி நின்று, இவ்வாறு கூறும் மாணுக்கனை, ஆசாரிய மூர்த்தியானவர் பரிவுடன் நோக்கி, உடனே அவன் கொண்ட பயத்தை நீக்குமாறு பணித் தருளினார்.

42. சாந்தநிலை யடைந்தவனாய், சலன மில்லாத மனத்தையுடையவனாய், ஞான நூல் களிலே கூறப்பட்ட விதிவிலக்குகளை ஆள்பவனாய் வீடுபேற்றை நாடியவனாய், தன் திருவருட் பேற்றை விரும்பியவனாய அப்பக்குவம் வாய்ந்த மாணாக்கனுக்கு ஆசிரியர் தம் பெருங்கருணையால் மெய்யறிவைப் போதிப்பான் தொடங்கினார்.

43. ஓ! அன்பனே! அஞ்சற்க! நீயோ என்று மழியாப் பொருள். கறங்குபோலச் சுழன்று சுழன்று வரும் இப்பிரபஞ்ச வாழ்வெனுஞ்

சாகரத்தைக் கடப்பதற்கோர் நற்புணையுண்டு. அப்புணையைப்பற்றி மேதாவிகள் பலர் முன் சென்றிருக்கிறார்கள். அதன் இரகசியங்களை யான் உனக்கு விளக்குகின்றேன்.

44. துவந்துவங்களாகிய இப்பிறவித் துயர்களினின்றும் நீங்கி வீடுபேறாய பெருந்துறையையடைவதற்கு ஒரு மேலான வழியுண்டு. அன்பனே! நீ அவ்வழியினூடு சென்றால் சம்சாரமாகிய சாகரத்தைத் தாண்டி, என்றுமழியாப் பேரின்பமாகிய துறையைச் சேர்வாய்.

45. வேதங்களெல்லாம் முழங்குகின்ற பொருளின் உண்மையை நாடினால் மெய்யறிவுதிக்கும். அவ்வறிவு பிறப்பிறப்பாகிய துன்பங்களினால் வரும் இடர்களை யெல்லாம் நீக்கிவிடும்.

46. உண்மையையறிய விழையும் ஒருவனுக்குச் சரியை கிரியை யோகமாதிச் சோபான முறைகளே முதற்கண் வேண்டப்படும் விதிகளென நூல்கள் விதித்தன. எவன் ஒருவன் இவற்றைக் கொண்டொழுகி வருகின்றானோ, அவனே மாயாதனுவாகிய வுடற்றளையினின்றும் விலகியவனாவன்.

47. அறிவாகிய நீ அறிவின்மையாகிய அவித்தையின் தீண்டுதலாலே சடப்பொருளென மயங்கினாய்! அத்திரிபுணர்ச்சியால் பிறப்பிறப்பாகிய வட்டத்தினூடு கறங்குபோற் சுழலலானாய். சித்துவேறு, சடம்வேறு என்று எண்ணும் மெய்யுணர்வாகிய ஞானாக்கினி, அவித்தையையும் அதன் காரியமாகிய தனு கரணங்களையும் நீறாக்கியழித்துவிடும்.



## வினா விளக்கம்

48. ஐயனே! அடியேன் அறியாமையாற் கேட்கும் வினாக்களுக்குத் தங்கள் திருவாயால் உத்தரம் அளிக்கத் திருவுள்ளம் இரங்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

49. பாசமாவதியாது? அது அறிவைப் பற்றியதெங்ஙனம்? அது எவ்வாறு தொடர்ந்து வருகின்றது? அதினின்றும் ஒருவன் விலகிக் கொள்வதெப்படி? சடமாவது யாது? மேலான பரமென்பவர் யார்? சடப்பொருளாய பாசத்தையும் சித்துப் பொருளாய பரத்தையும் ஒருவன் பகுத்தறியும் வழி யாது? ஐயனே! இவற்றை எளியனேற்கு விளக்கியருளுமாறு வேண்டுகின்றேன்.

## சீடனைப் பெருமைப்படுத்தல்.

50. இவற்றைக் கேட்ட குரு சொல்லுகின்றார்:–

அன்பனே! நீயே பக்குவன். நீ இம் மானுடயாக்கையிற் பிறந்ததன் பேற்றை அடைந்தாய். ஆதலால் உன் குலமும் பெருமையடைந்தது. நீ உன்னைப் பந்தித்த அறியாமையை நீக்கிப் பெருவாழ்வெய்த விழையலானாய்.

## சுய முயற்சியின் முக்கியத்துவம்

51. ஒரு தந்தையானவன் தான் பட்ட கடனைத் தீர்ப்பதற்குத் தன் மக்களையும் ஏனை ஒக்கலையும் நம்பியிருப்பான். ஆனால் தன்னைப் பாச பந்தத்தினின்றும் விடுவிக்கத் தானே துணையன்றி ஏனையோர் துணை செய்ய வல்லவரல்லர்.

52. தன் தலையிலுள்ள சுமையால் வரும் பாரத்தைத் தாங்கமாட்டாது துன்புறுமொருவன், அத்துயரை ஏனையோர் உதவிகொண்டு நீக்கலாம். ஆனால், பசி தாகம் முதலியவற்றால் தனக்குண்டான துன்பத்தைத் தானே தணிக்கலாமன்றிப் பிறரால் முடியாது.

53. பிணிவாய்ப்பட்டானொருவன், தக்க மருந்தாலும், விதிக்கப்பட்ட உணவாலும் குணமடைவான். ஆனால், பிறர் செய்யும் மந்திர தந்திர வினைகளாற் குணமடையமாட்டான்.

54. உலகப் பொருள்களின் உண்மையியல்புகளைத் தானே தன் அகக்கண்ணினறிவொளியாற் கண்டுணர்வதேயன்றிப் பிறர் காட்டமுடியுமோ? வானுலகத்துலவும் வளர்மதியின் தோற்றத்தைத் தன் கண்ணாற் கண்டு இத்தன்மைத் திம்மதியென மதித்தலேயன்றிப் பிறர் அறிவிப்பினறிய முடியுமோ?

55. இருவினையின் முயக்கால் வரும், ஆசை மயக்கமாதி அறியாமைகளாற் றூக்குண்டு பிணிக்கப்பட்ட தளையைத் தானே யறுக்க வழிதேடினல்லால், கோடானுகோடி கற்பங்கள் கழியினும் பிறரால் அறுக்க முடியுமோ?

## ஆத்ம ஞானத்தின் பெருமை.

56. வியாபகமான அறிவுப் பொருளிலே தன்னைக் கண்டறிந்தாலன்றிக் காயசித்தி செய்யும் யோகப் பயிற்சியாலும், சாங்கியமாதி நூற்பயிற்சியாலும், வேறு புண்ணியச் செயல்களாலும் வீடுபேறெய்த முடியாது.



57. ஒரு யாழின் எழிலும், அதன் நரம்பின் கட்டு பயில்வானின் கைச்சதுரும், தோற்றச் சிறப்பையும் செவியின்பத்தையும் பயப்பனவேயன்றி அவற்றினும் மேலான ஒரு பொருளைத் தர வல்லனவா?

58. பயனற்ற சொற்களை மாரிபோற் பொழிந்தாலென்? அறிவு நூல்களைப் பலபட விரித்துரைப்பிலென்? சலசலப்பான வேறு வினைகளை யாற்றினுமென்? இவையெல்லாம் ஓரிறைப் போழ்திற்கே யின்பம் பயக்குங் களியாட்டுக்களேயன்றி வீடுபேற்றை யுதவ வல்லனவல்ல.

59. வாலறிவினனுடைய உண்மைப் பொருளைக் காணுக்கால் அறிவு நூல்களைக் கற்றதனாலாய பயனில்லை. அம்மெய்ப்பொருளைக் கண்டமேலோனுக்குக் கற்பனவும் வேண்டியதில்லை.

60. பாசடை பொதுளிப் பகலவன் ஒளி நுழையாது, அலமரச் செய்யும் மரச்செறிவுடைய காட்டை யொத்தது சாத்திர நூலறிவு. அறிவாளி பரத்தின் உண்மையியல்பை அறியத் தளராது முயலவேண்டும்.

61. அறியாமை யென்னும் நச்சரவத்தாற் றீண்டப்பட்டானொருவனுக்குச் சித்துப்பொருளை யறியும் அறிவொன்றே மருந்தாகும். வேத சாத்திரங்களாலும், மந்திரங்களாலும் அவனுக்கு யாதும் பயனில்லை.

## தன் அநுபவம் அவசியம்.

62. நோய்க்குத் தகுந்த மருந்தை நோய் கொண்டான் உட்கொள்ளுதலின்றி, மருந்தின் பெயரை மாத்திரம் ஓதிக்கொண்டிருப்பின் நோய் நீங்கமாட்டாதன்றோ? அவ்வாறே சாதனையாற் சித்துப் பொருளைத் தன்னகத்தே கண்டு அதன் பயனாக வீடுபேறடைதலேயன்றி வாளா அப் பொருளின் பெயரைக் கூறுவதாலாம் பயனில்லை.

63. காரியப் பிரபஞ்சத்தாலாய பற்றை நீக்கி, சித்துப் பொருளின் உண்மையியல்பையறி யாது அப்பொருளின் பெயரை மாத்திரம் வாளா கூறித்திரிபவன் வீடுபேற்றைப் பெறமாட்டான். அவன் செயல் எல்லாம் பயனில்சொற் பகர்தலள விலேயே முடியும்.

64. தன்னுடன் பகைகொண்டாரையெல்லா மட்டுத் தன்னைச் சுற்றியிருக்கும் வளஞ்செறிந்த நாடுகளையெல்லாம் தனதாக்கி, ஒரு குடைக் கீழ்த் தனியரசு புரிபவனேயன்றி, ஏனையோன் ஒருவன் தன்னையோர் சக்கரவர்த்தி யென்றியம்ப முடியுமோ?

65. நிலத்தின் கீழ்ப்பாகத்திலிருக்கும் திரவி யத்தை எடுக்க முயலும் ஒருவன், பூமியின் மேற் பரப்பிலே கிடைக்கும் கற்களை யகற்றி நில வாராய்ச்சி நூலின்கண்ணே கூறப்படுகின்ற மாணறிவோடு தோண்டுமிடம் தோண்டி யும், திரவியத்தைக் கண்டுழி அதனைக் கையாற்பற்றி யெடுக்கவும் முயல்வானேயன்றி,



திரவியத்தின் பெயரைக் கூப்பிட்டவளவில் அது வெளியே வருவதன்று. அதுபோல மாயா சம்பந் தமான இருளில் மூழ்கித் தன்னையறியாது அல மந்து கிடக்கு மொருவன், ஞானகுருவின் திரு வாய்மொழிகளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து அவற்றாலுண்டாகும் மெய்யொளியில் தன் உண்மையியல்பைக் காணவேண்டுமேயன்றி வேறொரு வழியிலுங் காணமாட்டான்.

66. நோய்ப்பட்டார் எவ்விதமேனுந் தம்மை அந்நோயினின்றும் நீக்க முயல்வரன்றோ? அஃதே போற் பிறப்பிறப்பாகிய துயரக் கடலினுள் வீழாது தம்மைக் காத்துக் கொள்ளவேண்டியவர், ஒல்லும்வகையால் அதனைப் பெறுவான் முயல வேண்டுமன்றோ?

67. ஆதலான் மாணு! கேள்! நீ, இன்று என்னிடம் வினவிய வினுக்கள் எல்லாம் உண் மையை நாடுவாரறிய வேண்டியனவாய், ஆழ்ந்த நுண்ணிய பொருட்செறிவுடையனவாய், வேதா கமங்களைப் பயின்றோர் பாராட்டக் கூடியன வாயிருக்கின்றன.

68. அன்பனே! யான் கூறும் விடைகளைச் சிரத்தையோடு கேட்பாயாக. கேட்பாயேல் உன்னைப்பிணித்த பந்தமறுந்து நீ உயரிய வீட்டின் பத்திற் புகுவாய்.

69. அன்பனே! அழிதன் மாலையனவாய உலகப் பொருள்களின் பற்றை நீக்கும் வைராக்கி யமே முதற்படியாக, அதன்மேற் கால்வைத்

— 3

தேறி, சாந்தனுகிப் பொறுமைக்குணம்பூண்டு இதம் அகிதமாய இருவினைகளிலும் பற்றற்று நிற்றல் வேண்டும்.

70. பின் ஞானதேசிகன் திருவாய் மலர்ந்த நன்மொழிகளைக் கேட்டு, அவற்றை இடைவிடாது சிந்தித்து, ஏகாக்கிரக சிந்தனுயிரு. இருப்பின், நிர்விகற்ப சமாதி நிலையை அடைவாய். அந்த மேலான பதவியிலிருந்தே சிவானந்தத்தை யடையும் மோனநிலையைப் பெறுவாய்.

71. அன்பனே! நீ முதற்கண்ணே யறிய வேண்டியதாய ஒரு பொருளைப் பற்றிக் கூறுகின்றேன். அதுதான் சத்திற்கும் அசத்திற்குமுள்ள பாகுபாடாம். நான் சொல்வதைக் கேட்டுத் தெளிந்துகொள்.

72. ஊன் தோல் எலும்பு ஆதி எழுவகைத் தாதுக்களை யுடையதும், கை கால் தலை முதலிய உறுப்புகளை உடையதுமான,

73. 'நான் எனது' என்னும் அகங்காரமமகாரங் குடிகொண்ட, வீடாகிய இவ்வுடலை அறிந்தோர் தூலதேகமென்பர். வெளி, வளி, நீர், தீ, மண் ஆதி ஐம்பூதங்களின் சேர்க்கையாலாயது இது.

74. இப்பஞ்சபூதச் சேர்க்கையால் தூலசரீரம் உண்டாகின்றது. பின் அவற்றினின்று தன்மாத்திரைகளும் (சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தங்களும்) வேறு கர்மேந்திரியங்களும், உண்டாகின்றன.



75. இவ்வாறுன தத்துவங்களிடையே பாசமென்னும் கயிற்ருற் பிணிக்கப்பட்டோர், வினையாகிய விளையாட்டயர்வோன் எறிந்து விளையாடும் பந்துபோலக் கீழும் மேலுமாகப் போக்குவரவு செய்வார்கள்.

## மனிதனைத் தளைப்படுத்தும் பொறியே புலன்கள்

76. மானும், களிறும், விட்டிற் பறவையும், மீனும், கருவண்டும் ஆகிய பிராணிகள் இந்திரியங்களின் ஒன்றன் புணர்ப்பாலோ பலவாலோ நாசமடைகின்றனவெனின், இவ்வைம்பொறிகளினுலும் கட்டுண்ட மனிதனின் கதிதனைக் கூறவும் வேண்டுமோ?

77. படவரவின் கொடுவிடத்தினும் பார்க்க, இவ்வைம்பொறிகள் ஒருவனுக்குத் தீராதகேட்டை விளைவிக்கின்றன. நஞ்சோ, உண்டான் ஒருவனையே கொல்லும். ஐம்பொறிகளோ தம்மைக்காண்பானையுங் கொல்லுஞ் சக்தி வாய்ந்தன.

78. அறுவகைச் சமய நூல்களையும் கற்றுனுயினும் ஐம்பொறிகளின் பற்றுகிய தளையை ஒருவன் அறுத்தாலன்றி, அவன் வீடு பேற்றிற் கருகனுவானல்லன்.

79. உண்மையான துறவின்றி வைராக்கியம் மாத்திரம் பூண்டு பிறப்பிறப்பாகிய பேராழியைத் தாண்டிப் பதிஞானவீட்டை நாடுபவன் ஆசையெனும் மகரவாய்ப்பட்டு, போகும்நெறி தடைப்பட்டவனுய், சாகரத்து நாப்புண், அமிழ்ந்தியிறப்பன்,

80. ஆழ்ந்த துறவெனும் மந்திரவாளினாலே ஐம்பொறியின் பற்றாகிய சுறவை மடித்தவனே துக்க சாகரமாய கடலை நீந்தியவனாகின்றான்.

81. ஐம்பொறி யின்பவழியே தன்னை யலைய விட்டவன் தான் வந்தவாறும், போமாறும் யாதெனக் குறிக்கமுன் இறந்துவிடுகின்றான். ஆனால், நல்லாசிரியனது திருவருளுக்கிலக்காகி, அவர் நல்லுபதேச மொழிக்கிணங்கத் தன்னறிவைத் தெருட்டி நடப்பவன் தன் நோக்கத்தின் முடிவைப் பெறுகின்றான் என்பது திண்ணம்.

82. மாணவனே! நீ வீடுபேற்றை விழைந்தாயாயின், ஐம்பொறிவழிச் சேறலை ஒழித்து, அவாவின்மை, பிறவுயிர்க் கிரங்கல், பொறுமை, நேர்மை, தன்னடக்கம், சாந்தம் ஆதி மேலான அமுதம்போன்ற நற்குணங்களை உன்னிடத்து வேறூன்றி வளரச் செய்வாயாக.

83. அனுதியே தன்னைப் பந்தித்த மூலமல விருளின் தொடக்கினின்று தன்னை விடுவிக்க முயலாது நாய்க்கும் நரிக்கும் கழுகுக்கும் இரையாகிக் கழியுமிந்தவுடலை, ஆசையோடு வளர்ப்பவன் எவனோ அவன் தன்னுயிருக்குத் தானே பழி விளைத்தவனாகின்றான்.

84. உடலை யோம்புவதிலேயே தன் காலத்தைப் போக்கியும், இன்னும், சித்துப் பொருளாயுள்ள ஆன்மாவைத் தேடி நாடுவான்போல நடிப்பவன், ஓர் ஆற்றைக் கடக்க முயல்பவன், கட்டுமரமென நினைத்து முதலையின் முதுகிலிவர் தலை யொப்பானன்றோ?



85. வீடுபேற்றை விழைந்தானொருவனுக்கு 'யான்' 'எனது' என்னும் அகங்கார மமகாரங்கள் அழிவைத் தருவனவாதலின் அவன் அவற்றை வென்று அவற்றாற் றாக்கப்படானாயின் மேனிலைக் கருகனாகின்றான்.

86. மண், பெண், பொன் என்னும் மூவாசைகளையும் அறுத்துத் தன்னை விடுவித்தவனே வேதநூல்கள் கூறும் விண்ணவர் பதங்களைப் பெறுவன்.

## தூல உடல்

87. இந்தத் தூலதேகமோ ஊன், எலும்பு, தோல், மேதை முதலிய முழுநாற்றப் பொருள்களாலாக்கப்பட்டது. ஆதலின், இது வெறுத் தொதுக்கப்பட வேண்டியதே!

88. இத்தூலவுடம்போ ஒருவன் தான் செய்த கன்மவினைக் கீடாகக் கடவுளாற் றரப்பட்ட தொன்றேயாம். இத்தனுவினு ளிருந்தே தூலப் பொருள்களின் பயனை நுகர்தல் சாக்கிர நிலை யெனப்படும்.

89. சடமாகிய தூலப் பொருள்களினின்றும் ஆன்மா வேறாயினும், ஐம்புலன் வழியேபோய் இன்பங்களை நுகருங்கால், தன்னையும் அவற்றோடு ஒன்றாகவைத்து எண்ணி, அவற்றிலே சார்ந்து நின்று சார்ந்ததன் வண்ணமாக வின்ப மனுபவிக்கும்.

90. மாணவனே! இந்தத் தேகம் ஓர் வீட்டிலிருப்பவன் தனக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் கூட்டிவைத்தனுபவிக்கும் ஒரு பண்டகசாலையென எண்ணிக்கொள். இங்கிருந்தே வெளியுலகத்தோடு வியாபாரங்கள் செய்து கொள்கின்றான்.

91. இந்தத் தேகம் பிறப்பு, இறப்பு, மூப்பு, இளமை முதலிய வேறுபாடுகளுடையதாய் உயர்குலம், கீழ்க்குலம் என்னும் வருணப் பாகுபாடுடையதாய், பிரமசரியம் முதல் சன்னியாச மீறாய நான்கு ஆச்சிரம தர்மங்களுடையதாய், பழிப்புக் கௌரவம் முதலியன எய்துவதாய், அளப்பில்லாத நோய்களுக் கிருப்பிடமாயுள்ளது.

## பத்து இந்திரியங்கள்

92. பொருள்களைக் கண்டும் கேட்டும் சுவைத்தும் மோந்து பரிசித்து மறிதலால், மெய் வாய் கண்மூக்குச் செவி யென்பன ஞானேந்திரியங்களெனப்படும். பேசுதல், நடத்தல் ஆதித்தொழில்களைச் செய்தலால் வாக்கு, பாணி, பாதம், கருவாய் எருவாய் ஆதியன கன்மேந்திரியங்கள் எனப்படும்.

93. 94. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை அந்தக்கரணங்களெனப்படும். அவை, உடம்பகத்தே நின்று பொருள்களைப் பகுத்தறியும் உட்கருவிகளாம். மனம் ஒரு பொருளின் நன்மை தீமைகளையும், புத்தி அப்பொருளின் மெய்யியல்பையும், அகங்காரம் உடலைத்தானென அபிமானித்து உயிரோடு அபேதமின்றெனக் கொள்வதையும், சித்தம் இன்பநுகர்ச்சியையுங் காட்டுவன.



## ஐந்து பிராணன்கள்

95. பொன்னினின்றும் அநேக வணிகள் செய்யுங் காலத்து அவ்வணிகலன்கள் பலபேர்களைப் பெறினும் பொன்னாமாறு போலவும், நீர், திரை நுரையெனப் பலபேர் கொள்ளினும் நீரேயாமாறு போலவும், பிராணனே தான் செய்யுந் தொழிற்றன்மையால் பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் எனப் பல பெயர்பெறும்.

## சூக்கும உடல்

96. கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஞானேந்திரியங்கள் ஐந்தும், பஞ்சவாயுக்களும், ஐந்து பூதங்களும், அந்தக்கரணங்களும், அவித்தை ஆசை தொழில் முதலியன வருவிக்கும் மாயையும் சேர்ந்த எட்டுமே புரியட்டகமெனப்பட்டு உயிருக்குச் சூக்கும தேகங்களாகின்றன.

97. மாணவனே! உற்றுக் கேள். இந்தச் சூக்கும சரீரமோ பஞ்சபூதச் சேர்க்கையாலானது. கன்ம வினைப்பயனை அனுபவிக்க ஏதுவாயுள்ளது. ஆசையெனும் நோய் கொண்டது. அனாதியே உயிரைப் பந்தித்த மலவிருளின் பற்றால் இந்த உயிர் சுமத்தற்கோர் பொறையாயுள்ளது.

98 – 99. சொப்பனாவத்தையில் ஆன்மாதான் சைதன்ய அறிவோடு பிரகாசிக்கும். சாக்கிராவத்தையி லுண்டாய ஆசைகள் காரணமாகப் புத்தி தத்துவம் சொப்பனாவத்தையில் கர்த்தா,

போக்தா முதலியவைகளாக உருவெடுக்கும். ஆனால், ஆன்மாவோ தானேதானாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.

100. தச்சனுக்கு அவன் வாச்சியும் ஏனைய கருவிகளும் உதவுவது போல் அறிவுருவான ஆன்மா தொழில் செய்து நிற்பதற்கு இச் சூக்கும தேகமே கருவியாகின்றது. ஆனால், எத் தொழிலைச் செய்யினும் அவற்றால் அது பந்திக்கப்பட மாட்டாது.

101. கண்ணிலே மாலைக்கண், குருட்டுக்கண், தூரவொளிக்கண் எனப் பலவித வேறுபாடுகள் உண்டு. செவியிலே மந்தம், செவிடு முதலியன வுண்டு. ஆனால் ஆத்மாவுக்கு இவை போன்ற வேறுபாடுகளோ குறைவுகளோ இல்லை.

102. மூச்சை உள்ளே வாங்கலும், வெளியே விடுதலும், தும்மலும், கொட்டாவி விடுதலும், மலசலங் கழித்தலும், இறத்தலும் ஆகியவை யெல்லாம் வாயுவின் செய்கைகளே.

## அகங்காரம்

103. மனமானது ஞானேந்திரியங்களுடன் நின்றும், தேகத்தைச் சார்ந்தும், ஆன்மாவின் பிரதி விம்பத்தைப் பெற்றும் உடன் உறையும்.

104. அகங்காரம் தேகத்தோ டபிமான முடையதாய், தானே தேகமென வுணர்ந்து செய்பவனும், நுகர்பவனுமாயிருந்து முக்குண



வசப்பட்டுச் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி யென மூன்று அவத்தை நிலையையுமடையும்.

105. புறப்பொருள்கள் நன்மை பயப்பன வாயின் மகிழ்வுடையதாகவும் தீமை பயப்பன வாயின் துன்புறுவதாயு மிருக்கும். ஆகையால், இன்பதுன்பங்களெல்லாம் அகங்காரத்தால் வருவனவன்றி என்று மின்பமயமான ஆன்மாவால் விளைவனவல்ல.

## அன்பின் உண்மை வடிவம்

106. புறப்பொருள்கள் இன்பம் பயப்பதும், ஆன்மாவின் சைதன்ய ஒளி விளங்கும் போதேயாம். தாமே தனித்து இன்பப் பொருள்களாக விளங்க மாட்டா. ஆன்மா ஆனந்த வடிவினதாயிருப்பதால் ஒருகாலும் துன்பத்திற் குட்பட மாட்டாது.

107. ஐம்புலன்களின் வேறுய்ச் சொப்பனத்தில் ஆன்மா தனித்திருக்கும் இன்ப நிலையைப் பற்றிக் காட்சி, கேள்வி யனுபவம் முதலிய ஏதுக்களா லறிகின்றோம்.

## மாயா நிரூபணம்

108. மாயை கடவுளுக்கோர் சக்தியாயுள்ளது. அது அனாதியானது. இந்த உலகம் தோன்ற முதற் காரணமாயுள்ளது.

109. மாயை உள் பொருளுமல்ல; இல் பொருளுமல்ல; இரண்டுமல்ல. அணுக்களா லாக்

கப்பட்டதுமல்ல; ஆக்கப்படாததுமல்ல; சொல் லாற் கூறுந் தகைத்தது மன்றி, ஒரு நூதன வியப் புப் பொருளாயுமிருக்கின்றது.

110. இருட்டின்கண் எவ்வாறு ஒருவன் பழு தையைப் பாம்பெனப் பிறழவுணர்ந்து பின் வெளிச்சத்தில் அது பாம்பல்ல, கயிறெனவுணர்ந் தானே அதுபோலத் தன்னின் மிக்காரும், ஒப் பாருமில்லாத பரம்பொருளைத் தன் மெய்யுணர் வாற் கண்டவன் இந்த மாயையின் மயக்கினின் றுந் தெளிவான். இந்த மாயைக்கு இராசதம், தாமதம், சாத்துவிகம் என முக்குணங்களுண்டு.

## இராசத குணம்

111. இராசதம் கிரியா சத்தியெனக் கூறப் படும். இச்சத்தியால் இந்த உலகத் தோற்றமும், ஒடுக்கமுமாய கிரியைகள் இடைவிடாது நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இதினின்றே இன்ப, துன் பங்களான செயல்கள் நிகழ்ந்து வருகின்றன.

112. இச்சை, கோபம், அவா, பெருமை, பகை, எரிச்சல், பொறாமை ஆதித் தன்மைகள் இராசத குணத்தினின்றும் தோன்றுகின்றன. இவை ஆன்மாவைப் பந்தித்து உலகத்தோடொன் றச் செய்கின்றன. ஆதலின் இராசதகுணம் பந் தம் விளைவிப்பதொன்றே!

## தமோ குணம்

113. திரோதானம் அல்லது மறைப்புச் சத்தி தாமத குணத்தினின்று முண்டாவது. இச் சத்தி



பொருள்களின் மெய்யியல்புகளை மறைத்துப் பிறழ்ந்து தோன்றச் செய்யும். இம் மறைப்பால் மறுபிறப்புக்கள் உண்டாகின்றன.

114. ஞானிகளும், அறிவாளர்களும் ஆன் மாவின் மெய்யியல்பாகிய சூக்கும நிலையைத் தரி சித்த நுண்ணறிவாளர்களும் ஒரோவொருகால் இத்தாமத குணத்தின் வயப்பட்டு மயங்கி அம் மயக்கத்தில் தாம் கண்டதே மெய்யெனக் கொள் வாரேயானால் அந்தோ! இதன் வலியை யார் தான் வகுத்துரைப்பார்கள்?

115. மெய்யுணர் வின்மையும், ஐயமும், திரி புணர்ச்சியும் தாமத குணத்தின் மயக்கிற் பட் டோருக் கென்றுமுண்டு.

116. அறியாமை, நித்திரை, சோம்பல், மைதுனம், மடமை ஆதியன தாமத குணத்தின் தன்மைகளாகும். இவற்றாற் பந்திக்கப்பட்டவன் பொருள்களின் மெய்யியல்புகளை அறிய மாட்டா னாய், சன்னி நோய்வாய்ப்பட்டானொருவனைப்ப அறிவு செயலற்றுக் கல்லுப்போற் கிடப்பான்.

## சாத்துவிக குணம்

117. சுத்த சாத்துவிக குணமோ தெளிந்த நீரின் தன்மையது. இராசதம், தாமதம் எனு மிரண்டுடன் கலந்து ஆன்மாவின் மறுபிறப்பிற் குறுதுணையாய் வருகின்றது. சூரியன் ஒளியினால் எவ்வாறு கண்ணிற்கு எப்பொருள்களும் தோன்று கின்றனவோ அது போலச் சாத்துவிக குணத்தில் ஆன்மதரிசனம் காணப்பெறலாம்.

118. இந்தத் தாமத இராசத குணங்களுடன் கலந்த சாத்துவிகத்தின் தன்மைகளாக யான் எனது என்ற அகங்கார மமகார வீழ்ச்சியும், சீலம், தவம், சீவகாருண்ணியம், வீடுபேற்றின் நாட்டம் முதலியனவும் உண்டாகின்றன.

119. சுத்த சாத்துவிக குணத்தின் இயல்போ வெனின் ஆனந்தம், திருவருட்டெரிசனம், சாந்தி, விருப்பு-வெறுப்பின்மை, சதா பரம் பொருட்டெரி சனமாகிய இவைகளாம். இந்நிலையை யடைந்த ஆன்மா என்றுமழியாப் பேரின்பிற் றிளைத்திருக்கும்.

## காரண சரீரம்

120. இந்த முக்குணங்களின் கலப்பான கேவலநிலையில் அசுத்த மாயையின் கலப்பான காரண சரீரத்தை ஆன்மா பெறுகின்றது. இந்த நிலை உணர்வு, விருப்பு, வெறுப்பு எனும் பகுப்பு களின்றி ஆழ்ந்த நித்திரையாகின்ற நிலை.

121. இந்தச் சுழுத்தி நிலையில் மனமானது ஒன்றும் நினைக்க முடியாது. வித்தின் முளைபோல உள்ளடங்கிச் செயலற்றுக் கிடக்கும். கனவு மின்றி உறங்கி விழித்தபின் "ஒன்றுந் தெரிய வில்லை" என்று கூறு மவத்தை.

122. தேகமும், இந்திரியங்களும், வாயுக் களும், அந்தக்கரணங்களும், கர்மேந்திரியங்களும், இன்பமும் துன்பமும், அசுத்த மாயா தத்துவத் தின் கீழ்ப்பட்ட எல்லாப் பொருள்களும் சடப் பொருள்களாம்.



123. இவை யெல்லாம் மாயையின் காரியப் பொருள்கள். வனந்தரத்திலே வேனிற் காலத் துண்டாகும் கானல் நீர் போல இவையெல்லாம் நிலையற்ற பொருள்கள் என அறிந்துகொள்.

124. மாணவனே! இனி, யான் பரமாத்மா வின் மெய்யியல்பைக் கூறுகின்றேன். கேட்பாயாக. அப்பரமாத்மாவைத் தன்னுள்ளே தரிசித்தவனே பிறப்பிறப்பாகிய பந்தத் தளையை வெட்டி முத்தி யின்பம் பெற்றவனுவான்.

125. அன்னமயம், பிராணமயம், மனோமயம் விஞ்ஞானமயம், ஆனந்த மயமான பஞ்சகோசங் களினின்று மப்பாற்பட்டதாய், இராசத, தாமத, சாத்துவிக குணங்களைத் தொழிற் படுத்தித் தான் அவற்றுற்றுக்கப்படாததாய், சாட்சிப் பொரு ளாய், என்று முள்ளதாய்,

126. சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி எனும் நிலைகளில் நடப்பனவற்றை அறிவதாய், அந்தக் கரணங்களின் தொழிலியக்கங்களை அறிவதாய் உள்ளதுவே, அந்தப் பரமான்மா.

127. யார் எப்பொருளையும் பிறிதோர் துணையின்றிக் காண்கின்றுனே, யார் பிறரால் அறியப்படா திருக்கின்றுனே, யார் அந்தக்கரணங் களுக்கு அறிவைத்தந்து நிற்கின்றுனே அவனே பரமாத்மா.

128. அங்கிங் கெனுதபடி எங்கும் நிறைந்த தாய், தன்னருள் ஒளிக்குள்ளே உலகங்களை ஒளிரச் செய்து நிற்கின்றது எதுவோ அதுவே அப்பரமாத்மா.

129. யாருடைய திருமுன்பே இந்திரியமும் மனமும் அறிவும் ஒவ்வோர் பணியாளர் போலத் தத்தம் எல்லைகளுளடங்குகின்றனவோ?

130. சூக்கும சரீரந் தொடங்கித் தூலதேகம் வரையும் புறக்கருவிகளும் அவற்றினுணர்ச்சியும் இன்ப துன்ப வேறுபாடுகளும் யாவனுலறியப் படுகின்றனவோ அவனே அழியாப் பேரறிவன்.

131. இவனே உயிருக்குயிராயவன்; அனுதியாயுள்ளவன்; ஆனந்தமயமாயுள்ளவன்; இந்திரியங்களெல்லாம் தத்தம் நெறிகளிற் படரச் செய்தும் அவற்ருேடுடனுயும் தானவற்ருற் ருக்கப் படாதவனுயு முள்ளவன்.

132. இத்தேகத்திலும் சாத்துவிகம் நிறைந்த மனத்திலும் புத்தி தத்துவத்திலும் ஞானவொளியிலும் என்று மானந்த வடிவினனுன இந்தப் பரமான்மா சூரியனைப்போன் ருெளி விட்டிலங்கி, மற்றெப் பொருள்களையும் தன்னுெளியாற் பிரகாசிப்பித்துக் கொண்டு விளங்குகின்ருன்.

133. அந்தக்கரணங்களி னியல்புகளையும் தேகம் இந்திரியம் பிராணன் முதலியவற்றின் இயக்கங்களையும் அறிந்தவன் இரும்பாலாய உண்டையைப் பற்றிய தீயானது உருண்டை வடி



வானது போலத் தனக்கோர் சார்பில்லாதவனுயினும், இவற்றின் சார்பால் இவ்வண்ணமாய் விளங்குகிருன். ஆனுல், தான் எத்தொழிலையுஞ் செய்யாது தன் சந்நிதானத்திலே யாவும் தொழிற் படத் தான் அவற்ருல் ஒரு விகாரப்படாது விளங்குகின்ருன்.

134. பிறப்பிறப் பில்லாதவன்; வளர்வு தேய்வில்லாதவன்; விகார வேறு பாடில்லாதவன்; என்றுமுள்ளவன்; தேகம் அழிந்த காலத்தும் தான் அழிதலின்றி (குடாகாயம் போல) வேருென் றின் சார்பின்றித் தன் வயமுள்ளவன்.

135. ஒப்புயர்வற்றவன்; அசுத்தமாயையின் வியாபாரங்களினின்றும் அப்பாற்பட்டவன்; பேரொளியானவன்; ஏகன்; சொற்பிரபஞ்சம் பொருட் பிரபஞ்சமென்பவற்றை விரித்து ஒடுக்கி நடத்துபவன்; புத்தி தத்துவத்தில் நின்று தொழில் செய்து தான் அதன் தொடர்பற்றவன்.

136. இவ்வாருன சித்துப் பொருளை, ஓ! மாணவனே! சித்த சுத்தியுடனும், ஏகமனத்துடனும் நீ உன் தேகத்தினுள்ளே கண்டு காரண கஞ்சுகமாதி தேகங்களைக் கடந்த அந்தப் பரமான்மாவுடன் நீயும் ஒன்றெனக் காண்பாயானுல் பிறப்பிறப்பாகிய அலைகளை என்றும் எறியும் சம்சாரமென்னும் வாரிதியைக் கடப்பாய். அன்றியும், நீயே இன்பத்தை எய்தியவனுவாய்.

137. சடப்பொருள்களுடன் சித்துப் பொருளாகிய தன்னையும் ஒன்றென வைத்தெண்ணிய

தால் ஒருவனுக்கு அறியாமையும், அதன் பயனுகப் பந்தமும், அதனுல் பிறப்பிறப்பும் வருகின்றன. இதனுலன்றே நில்லாதழியும் பெற்றி வாய்ந்த உடம்பைத் தானெனப் பிறழவுணர்ந்து அதனேடு சார்ந்து அதனை வாசனைத்திரவியங்களினுலும் ஆபரணங்களினுலும் அலங்கரித்துப் போற்றிவளர்த்துப் பின், தான் செய்யும் புழுக்கூட்டினுள்ளே தான் சிக்கிக்கொள்ளும் புழுவையொப்ப, இந்தப் பிறப்பிறப்பாகிய சாகரத்தில் மூழ்கிக்கொள்கின்ருன்.

138. அறியாமையாகிய இருட்படலம் மூடிய கண்களையுடையவர், பொருள்களின் மெய்யியல்புகளை யறியமாட்டார். இந்த் இருள் நீங்காமையினன்ரே கயிற்றைப் பாம்பெனக் கண்டு கலங்குவர். இவ்வாறு மால் கொண்டாருக்கு வரும் இன்னல்களளப்பில. அன்பனே! கேள்! நின்றுழி நில்லாதழிதன் மாலையனவாய பொருள்களை மெய்ப்பொருள்களெனப் பிறழவுணர்தலே பந்தத்தை விளைவிப்பதாகும்.

139. இந்த மறைப்பென்னுந் திரோதானமே அகண்டமாய், அறிவொளியாய், கற்பனை கடந்ததாய், என்றும் உள்ளதாய், தன்னையொப்பாரும் மிக்காருமின்றிய தனிமுதற்பொருளாயுள்ள சித்தை, கதிரவனைக் கட்செவி மறைப்பதே போல மறைக்கின்றது.

140. பேரொளியாகிய சித்துப்பொருள் அறியாமை என்னுந் திரையால் மறைக்கப்பட்ட பின் ஒருவன் சடமாகியவுடலைத் தானென்ன எண்ணுகின்ருன். அப்போ இராசத குணத்தின் செயலாகிய காமக்குரோத மோகமாதி விலங்குகளிற் சிக்கிக்கொள்கின்ருன்.



141. இவ்வாருய பிறழ்வுணர்வுடையவன் அறியாமையெனும் மகர வாய்ப்பட்டுப் புத்தியின் ஆணைவழி நின்று குளிர்ந்து கொல்லுஞ் சிங்கியொத்த வின்பங்களிற் சிக்குண்டு கரையற்ற பிறப்பிறப்பாகிய வாழ்கடனுப்பண் வீழ்ந்தும் தாழ்ந்தும் மிதந்தும் தவிப்பன்.

142. சூரிய கிரணங்களின் சார்பால், நீராவியாக மாறி மேலெழும் மேக படலங்கள் பின் எவ்வாறு சூரியனை மறைத்து நிற்குமோ அவ்வாறே ஆணவமாகிய இருட்படலமுஞ் சித்தின் சுயரூபத்தை மறைத்துத் தன்னிலும் மேலாந்தன்மையர் பிறரிலரெனத் தருக்கி நிற்கும்.

143. விழுது விட்டாலன்ன இருண்மேகங்களால் சூரியன் ஒளி மறைந்த நாளில் சண்டமாருதம் எழுந்து அம்மேகங்களை எவ்வாறு சிதறவடிக்குமோ அஃதேபோல் ஆன்மாவும் அறியாமையான மேகங்களால் மூடப்பட்டிருக்கும். அப்படி மூடியகாலை, மனிதன் எல்லையில்லாத பிறவிகடோறுஞ் சென்று சென்று இடருழப்பன்.

144. திரோதானம் முனைப்பு என்ற இரு மாயா சக்திகளாலும் பந்த மேற்பட அப்பந்தத்தால் ஒளியிழந்து இருட்டறையிலே பொருள்

— 4

தேடுவாளுைப்பத் தேகமே தானென நினைந்து பிறவிகடோறு மலைவன்.

## சம்சார விருக்ஷம்

145. சம்சாரமென்னும் பாதவத்தின் வித்து, அறியாமையே. தேகம் தானென மயங்கலே அங்குரம். மயங்கி உலக வியாபாரங்களிற் பரவலே பாசடை. அவ்வியாபாரங்களிற் றொடக்குண்டு உழைத்தலே நறுநீர். தேகமே மரம். பிராண வாயுவாதித் தத்துவங்களே கொம்பர்கள். இந்திரியங்களே சுள்ளிகள். ஐம்புலன்களே மலர்கள். தான் செய்து கொள்ளும் புண்ணிய பாவங்களுக்கேற்க வரும் இன்ப துன்பங்களே கனிகள். ஆன்மாவே அக்கனியி னிரசத்தை யுண்ண அம்மரத்திற் குடிகொண்டிருக்கும் ஒரு பறவை.

## தளையின் விளக்கம்

146. இந்தப் பந்தமோ ஒருவனுக்கு வேறு காரணமின்றித் தான் செய்த வினைகளின் பயனாய் வந்தது; அனாதியாயுள்ளது. அது செய்தானைப் பிறப்பிறப்பிற் புகச்செய்து பிணிமூப்பு ஆதிப் பேரின்னல்களை வருவிக்கும்.

## ஆத்மானாத்ம விவேகம்

147. இப்பாசத்தளையோ, படைக்கலங்களாலும் ஊழித்தீயாலும் வேறு எண்ணிறந்த புண்ணியச் செயல்களாலும் வென்றழிக்க முடியாததொன்று. ஆனால் இந்த உலகம் வேறு, தேகம் வேறு, தான் வேறு என்றும் உலகப் பற்றுக்கள் துன்பம் பயப்பன வென்று மறிந்த நுண்ணுணர்வினனாகி அவ்வுணர்ச்சியே தன்பகையாய பாசத்தை யறுக்கும் வாளெனக் கொண்டு அவ்வாளும் திருவருளின் கடைநோக்கம் பெறச்செய்து விடுவானேயானால் ஒருவன் இப்பாசத் தளையை இலகுவில் வெட்டி வெற்றிபெறுவான்.



148. வேதாகமங்களிலே கூறப்பட்ட விதிகளை ஒருவன் விடாமுயற்சியுடன் புரிந்து வருவானாயின் அச்செயல் காரணமாக அவன் மனம் தூய்மையுறும். தூய மனத்தனானபின் சித்துப் பொருளின் மெய்யியல்பை யறிவன். இவ்வாறு சித்துப்பொருளின் மெய்யியல்பைத் தன்னகத்தே கண்டவன்தான், அன்று தொட்டுத் தன்னைப் பந்தித்த அறியாமையாம் மாயையின் வலியை வென்றவன்.

149. தண்ணீர் நிறைந்த தடாகத்தின் மேற்பரப்பின் கண்ணே பாசி படர்ந்து நீரை மூடினால், அதன் கீழேயுள்ள நீரானது கட்புலனுக்குத் தெரியாது மறைவதுபோல மாயையிற்றரப்பட்ட பஞ்ச கோசங்களாய கவசங்களாற் போர்க்கப்பட்டவனுக்குச் சித்துப் பொருளின் தூயநிலை தெரிய மாட்டாது.

150. அப்பாசியை நீக்கிய பின் வேனிலால் வெதும்பியவனின் தாகத்தை நீக்கிப் பருகியவுடனே இன்பம் பயக்கும் அத்தெள்ளிய நறும் புனல் பார்ப்பானுக்கு வெளித் தோன்றும்.

151. இப்பஞ்ச கோசங்களாய போர்வை களையும் கழற்றிய ஒருவனுக்கு மலரகிதனுய், நித்தியனுய், உயிர்க்குயிராய், ஆனந்தனுய், சுயம் பிரகாசனுயுள்ள சித்தின் ஒளிதோன்றும்.

152. பாசத்தளையை நீக்குபவன் சடத் தினதும் சித்தினதும் இயல்புகளை உணரவேண்டும். அப்போதுதான் நித்திய அறிவானந்தத் தனிப் பொருளான மெய்ப்பொருளைக் கண்டு களிப்பன்.

153. தேகமும் இந்திரியங்களும் வேறு. தேகத்தினுள்ளே உயிர்க்குயிராய் பாசத்தளை யற்றதாய் எல்லாமாய் அவற்ருேடு தொடக் கில்லாததாயிருக்கும் சித்துப்பொருள் வேறு என உணர்ந்தவனே பாசத்தளையினின்றும் நீங் கியவன். அவன் அச்சித்தே நாம ரூப விகாரங் களுடன் எங்குங் கலந்திருப்பதொன்றென அறிந்து அதனுட்டா னடங்கியிருப்பன்.

## அன்னமய கோசம்

154. எமது தேகமோ சோற்ருலாக்கப் பட்டது. சோற்றையுண்டுவளரும். அஃதில்வழி யழியும். அது தோல் இறைச்சி எலும்பு ஆதிப் பொல்லாப் புழுமலிப் புன்பொருள்களா லாக்கப் பட்டது. ஆதலின், சுத்தமற்றது. அன்றியும், பிறர்சார்பின்றிய தனிப்பொருளுமாக மாட் டாது.

155. தேகமோ யாம் பிறப்பதற்கு முன் னுள்ளதுமல்ல. இறப்பதற்குப் பின்னிருப்பது மல்ல. இடைநடுவிற் சிறு போழ்திற்குரியது. நில்லாதழியும் குணமுடையது. இளமை, முதுமை, நரை திரை முதலிய வேறுபாடுகளுடையது. எண்பத்து நான்கு நூருயிரவச்சு வேறுபாடு டையது. புலனுகர்ச்சிக்குரிய தத்துவங்களி ஞென்று. அவ்வாருயின் பின் அது எல்லாமா யல்லவுமாய்த் தான் அவ்ற்றிற் சாராது எப் பொருள்களையும் விகாரப்படுத்தி நிற்கும் சித்துப் பொருளாமாறெங்ஙனம்?



156. கை, கால் முதலிய வுறுப்புகளுடன் தோன்றிய தேகம் ஆன்மா வல்ல ஏனெனின், ஓர் உறுப்புக் குறைந்துழியும் ஏனைய உறுப்புக் களின் தொழில்களில் யாதும் ஊனமின்றி, ஆன்மா உடம்போடு சீவித்திருத்தலினென்க. அன்றியும், ஆட்டுபவன் ஆட்டியக்கால் ஆடும் தேகம் எவ்வாறு ஆட்டுந் தலைவனுக வரமுடியும்?

157. ஆதலால், தேகத்தினுள்ளேயிருக்கும் ஆன்மா பருத்தல், சிறுத்தல், கெடல், இளமை, முதுமை அழிதலாதியாம் விகாரங்களைப்பெறும் தேகத்தினின்றும், வேருய் அறிவுருவாய் விளங்கி யிருக்கும்.

158. தசை எலும்பு ஆதியாம் முடைநாற்றப் பொருள்களாலாய உடம்பு எல்லா மறியு மறி வனுய்த் தேக சம்பந்த மில்லாதவனுய ஆன்மா வாவது எங்ஙனம்?

159. ஞானியொருவனே தன்னியல்பை யறிந்து தானே ஓர் உண்மைப் பொருளெனக் கண்டுகளிப்பன். ஞானமில்லாதவன் எலும்பு

தோலிறைச்சியி வற்ருலாக்கப்பட்ட குரம்பை யையே தானெனமயங்கிக் கிடப்பன்.

160. ஞானமில்லாதவன் தானே தேகமென நினைக்கின்ருன். சாத்திரஞானி தேகமும் ஆன்மா வுங்கலந்த அவசரமே தானென நினைக்கின்ருன். ஆனுல், மெய்யுணர்வின் பயனுக வந்த அறி வொளி விளங்கி நிற்கும் ஞானியோ நித்தியனு யுள்ள சித்துப் பொருளேயே தானெனக் கண்டு "நானே அப்பிரமப்பொருள்" என்கின்ருன்.

161. ஓ, அஞ்ஞானியே! இந்தத் தேகத்தை இறைச்சி, தோல், எலும்புக்கூட்டமாகிய குடம் பையை, நீ எனப் பிறழவுணர்தலே யொழித்து, ஏகனுய் முதல்வனுயுள்ள சித்துப் பொருளோடு சிவோகமாகி இன்பத்தை நுகர்வாயாக.

162. இனி, கற்ற கல்வியின் பெருக்காற் றன்னே ஞானியெனக் கொண்ட சாத்திரஞானி, சகலவேதாகம பண்டிதனேயாயினும் தன் விபரீத உணர்ச்சியை நீக்கும்வரை வீடுபேற்றை யடைய மாட்டான்.

163. ஓ அன்பனே! உனது தேகத்தின் நிழலே யும், கண்ணுடி நீர் முதலியவற்றிற் ருேன்றும் உன்உருவநிழலேயும் உன்கனுவிலும் எண்ணத் திலும் உதிக்கும் உருவங்களேயும் எவ்வாறு உன்னி னின்றும் வேருனவையெனக் கணிக்கின்ருயோ அவ்வாறே உனது தூல தேகத்தையும் உன்னின் வேருகப் பார்.



164. தன்னேயுந் தேகத்தையும் ஒன்றெனப் பிறழவுணர்தலே பிறப்பிறப்பாகிய துயரங்களே வருவிக்கின்றது. ஆகையால் நீ அவ்வாறு பாவனே செய்தலே நீக்கிவிடு. மனத்தாற் பாவனே செய்யு மிதனே நீ யொழித்தாயானுல், இனிப்பிறவாப் பெருவாழ் வெய்துவாய்.

## பிராணமய கோசம்

165. பிராணன் கர்மேந்திரியங்களுடன் கூடித் தொழிற்படக் காரணதேகமும், அதன் சார்பாகத் தூலதேகமும் தொழிற்படுகின்றன.

166. இந்தக் காரணதேகமோ வாயுவின் ஓர் இயக்கத்தையுடைய தாதலின் சித்துப் பொருளல்ல. இவ்வாயுவும் காற்றைப் போலத் தேகத்தின் உள்ளும் புறம்பும் திரிவதாலும், சித்துப் பொருளின் சார்பாக விருக்கின்றதாலும், தன் சுகதுக்கங்களேத் தானறிந்து கொள்ளு மாற்றல் இன்மையானு மென்க.

## மனேமய கோசம்

167. ஞானேந்திரியங்களும் மனமும் கூடிய விடத்து மனே மயகோசம் பிறக்கும். இதுவே அகங்காரத்தை விளேவிக்கும். நாமரூப பேதங்களே விளேவிக்கும் சக்திவாய்ந்ததும் இதுவே. இது மேற் கூறிய பிராணவியக்கத்தைத் தன்னுளடக்கித் தான் மேலாக விளங்கி நிற்கும்.

168. மனேமயகோசமாகிய ஓமாக்கினியில் ஞானேந்திரியங்களாகிய ஞான குரவர்கள், ஆசை

களாகிய ஓமவிறகை யிட்டு இந்திரியங்களால் நுகரப்படும் இன்பதுன்பங்களாகிய ஆகுதிப் பொருள்களை யீந்து, அவ்வக்கினியைச் சுவாலிக்கச் செய்ய, அதினின்றும் இம்மாயப் பிரபஞ்சந் தோன்றும்.

169. மனத்தின் வேருக அவித்தை யென்ப தொன்றில்லை. இதுவே பிறப்பிறப்பைக் கொடுக் கும் பந்தத்தை. இந்தப் பாசத்தின் வலியை யடக்கினவனே எல்லாம் வென்றவனுவான். அன்றி அது தலையெடுத்து நிற்பின் பந்தங் களெல்லாம் சூழ்ந்து கொள்ளும்.

170. வெளிப்பிரபஞ்சத்தோடு யாதுந் தொடர்பின்றித் தூங்குகின்ற சொப்பனுவத்தை யில், மனமே ஓர் பிரபஞ்சத்தையும், காண்பான் காட்சி முதலியவற்றையும் பார்க்கின்றது. சாக் கிரத்தினு மவ்வாறேயாம். ஆகையால் இவ்வுலக வியாபாரங்க ளெல்லாம் மனத்தின் ஓர் முனைப் பேயாம்.

171. கனவு தானுங் காணப்பெருத சுழுத்தி நிலையில், மனம் யாதுஞ் சலனமின்றித் தன் சூக்குமநிலையையடைந்தபோது, தூங்குவானுக்கு அங்கு யாதும் காணப்படாதவாறுபோல, இவ்வுலக இன்பதுன்பங்கள் பிறப்பிறப்புக்கள் எல்லாம் மனத்தாற் படைக்கப்பட்ட தோற்றங் களேயன்றி வேறல்ல.

172. எவ்வாறு மேகப்படலங்கள் காற்ருல் ஓரிடத்திற்குச் சேர்க்கப்பட்டுப் பின் அக்காற்றி



னுலேயே சிதறடிக்கப்படுகின்றனவோ; அவ்வாறே பாசபந்தங்களெல்லாம் மனத்தாற் பார்க்கப் பட்டுப் பின் அம்மனத்தாலேயே அப் பந்தநீக்க மும் பெறப்படுகின்றது.

173. மனமானது ஒருவனைத் தன் தேகத்தி னிடத்தும், மண், பெண், பொன்முதிப் பொருள் களிடத்தும் பற்றுவைக்கச் செய்து தறியின் கயிற்ருற் பிணிக்கப்பட்ட விலங்குபோல அவற்ரு லவனைக் கட்டுண்ணச் செய்கின்றது. பின், அந்த மனந்தானே உலகப்பற்றுக்களை யெல்லாம் நஞ் சென வெறுக்கச்செய்து, அக்கட்டுக்களி னின்றும் அவனை விடுவிக்கின்றது.

174. ஆகையால் மனிதனின் பாசத்தொடக் கிற்கு மவன் விடுதலைக்கும் மனமே காரணம். இராசத தாமத குணங்களின் வயப்பட்டு நின் றுழிப் பந்தத்தையும், அவற்றின் நீங்கிச் சுத்த மான சாத்துவிககுணம் பற்றியவழி, வீடுபேற் றையும் உதவுகின்றது.

175. நித்தியாநித்திய வஸ்துவின் உண்மை களைப் பகுத்தறியும் விவேகத்தாலும், அவ்விவே கத்தின் பயனுல்வரும் துறவினுலும், தூய்மை யுற்ற சாத்துவிக குணம்பற்றிய மனம் வீடுபேற் றைத் தலைக்கொள்ள விரும்பும். ஆதலால், மெய்யறிவுடையவன் இந்த விவேகத்தையும் தான் சித்து, மற்றவைகள் சடப்பொருள்கள் என்றனுபவத்தா லாய்ந்த துறவையும் ஓம்பி வளர்க்கவேண்டும்.

176. ஐம்புலவேடர் ஆறலைத்துச் சூறை கொண் டின்பந் துய்க்குங் கானகத்தே, மனமெனு மோர் தீவாயுமுவை வாழ்கின்றது. மேனெறியாய செம்புலம் படருஞ் செல்வர் ஆண்டுச் செல்லா தொழிவாராக.

177. ஒரு தேகிக்குச் சாக்கிரத்திலேனும், சொப்பனத்திலேனும், ஆண் பெண் என்ற வேறு பாட்டையும், மேல், கீழ் என்ற சாதிப்பகுப்பை யும், நான்கு வருணுச்சிரம நிலைகளையும், மாந்தர் பக்குவ நிலைகளையும், காமியச் செயல்களையும் அவற்றுனெய்தக்கூடிய இன்ப துன்பங்களையும், ஓயாது விளைவித்துக் கொண்டிருப்பதும் இம் மனமே.

178. இம்மட்டோ, மனமானது, களங்கமற்ற சித்துப்பொருளான ஆன்மாவைத் தனு, கரணம், புவனம் என்னும் போகங்களிற் றளைப்படுத்தி, முன் தான் செய்த புண்ணியபாவ வினைகளுக் கிணங்க வரும் இன்ப துன்பங்களை நுகருங்கால், யான் எனது என்னும் அகங்கார மமகாரங்களாய வறும்புனத்து மாழ்கி யலையச் செய்கின்றது.

179. சடப்பொருள்களைத் தானெனமயங்கிய பொய்யறிவால் பிறப்புண்டாகின்றது. இதுவும் மனத்தால் விளைகின்றது. இந்த மயக்கவுணர்வும் இராசத தாமத குணங்களின் வயப்பட்டானையே சென்றடைந்து அவனைப் பிறப்பிறப்பாகிய இன்னல்களுட் டள்ளி விடுகின்றது.

180. ஆகையாலன்றே, மனத்தின் கொடுஞ் செயல்களை யெல்லாம் ஆழ்ந்து துருவிப்பார்த்து



அதன் மயக்கிற்கு மப்பாற்பட்டுத் தழைத்த பேரின் பத்தூடே யூஞ்சலாடும் பெருந்தவ யோகர்கள் இந்த உய்ந்நெறி சற்றுமின்றிப் பொய்நெறியிற் றள்ளும் மனக்குரங்கை ஒரு மாயை என்றும், அம் மாயையே இந்த உலகை யூசலாட்டி வைக்கின்ற தென்றும், அம்மனமாயையிற் சிக்கியோர் திண் டிறல் வாயுவாற் சிதறப்போக்கிய கொண்டலை யொப்பர் எனவும் விண்டனர்.

181. இவ்வாறு பெருந்தவர் மொழிந்த அருண் மொழிகொண்டு நன்னெறி படர்தலை விழைந்தாயானுல், அன்பனே! இடைப்படுத்தி ஆறலைக்கும் மனத்தை, அதன் சிறுமைக்குணம் நீக்கித் தூய்மையடையச் செய்தாயானுல், கையிடை விளங்கும் நெல்லிக்கனியென நாடி நிற்கும் மெய்ந்நெறியான மோன மேனிலை யடை தல் திண்ணம்.

182. வீடு பேற்றின்பத்தி லாழ்ந்த கருத்து டையவன், ஐம்புலன் வழிச் சேறலைத் தணந்து பயன் விழைந்து செய்யும் செயல்களை நீக்கிப், பர மான்மாவிலே அன்பும் நம்பிக்கையுமுடையவனுய், அடியார் வாழக் கருணைவடிவெடுத்த குருநாதன் திருவாய் மொழிகளை வேதவாக் கெனக்கொண்டு, அவ்வேத மந்திரங்களை அல்லும் எல்லியும் சிந்தித்துத் தெளிந்தானேயானுல், ஒருவன் யான் எனதெனு மகங்கார மமகார முனைப்பை விளைத்து நிற்கும் இராசத குணத்தின் தன்மையையடக் குவன்,

183. இனிச் சூக்கும தேகம் பரமான்மாவு மல்ல. தோற்றமு மீறுமுள்ளதாதலாலும், இளமை

முதுமை எனுமியல்புகளைப் பொருந்தலாலும் இன்ப துன்பங்களை நுகர்தற்கேதுவாயும் ஆன்மாவா லறியப்பட்டதாயு மிருத்தலினாலுமாம். ஆகையால், இவற்றை இயக்கும் கருத்தா வாகிய சித்துப் பொருள் இந்திரியங்களா லறியப்படாத அகண்டிதனே.

## விஞ்ஞானமய கோசம்

184. புத்தி தத்துவம் அதன் சார்பான அகங்காரத்தோடு சேர்ந்து, நானே தலைவனென முனைத்து நிற்குமவசரத்தில்தான் விஞ்ஞான மயகோசம் உண்டாகின்றது.

185. இந்த விஞ்ஞான மயகோசம் சடமா புள்ள தெனினும் சித்தின் பிரகாசத்தினால் பிரதி விம்பிக்கப்பட்டதாயுள்ளது. எப்பொழுதும் தேகத் தையுங் கரணங்களையும் தானென அபிமானித் திருக்கச் செய்வது,

186. 187. இது அனாதியாய் உள்ளது. ஆண வத்தின் சார்புடையது. சீவன் என்றழைக்கப் படுவது. எத்தொழிலையும் உடம்போடு கூடச் செய்வது. முற்பிறவிகடோறு மீட்டிய வினையின் பயனாக வரும் நன்மை தீமைகளை யனுபவிப்பது; புல்லாகிப் பூடாய் மரமாய்த் தேவராய் மனுட ராய்ப் பிறந்து கீழ் மேல் நடுவென்ற மூவிடங் களுக்கும் போக்குவரவு செய்வது; சுழுத்தி, சொப் பனம், துரியம் என்ற நிலைகளில் நின்று முறையே இன்பதுன்பங்களை அனுபவிக்கின்றது.



188. இவ்வாறு நுகருங்கால், தேகத்திற் குரித்தான வருணாச்சிரம நிலைகளையும் தொழில் களையும் தனக்கே யாக்குகின்றது. சித்துப் பொருளோடு அணித்தாயிருத்தலால், சோதிமய முடையதாயிருக்கின்றது.

## ஆத்மாவின் பற்றின்மை

189. சுயம்பிரகாசமுள்ள ஆன்மாவே பிராணசக்தியுடன் விளங்குகின்றது. மாறுவியல் புடைய தெனினும், விஞ்ஞானமய கோசத்தின் மறைப்பால் தானே கருத்தாவும் நுகர்பவனுமாய் எண்ணிக் கொள்கின்றது.

190. தோற்றிய பிரபஞ்சப் பொருள்களுக் குள்ளே உயிர்க்குயிராய் விளங்கி நிற்குமிப்பொருள் விஞ்ஞானமய கோசத்தின் கட்டுப்பாட்டால் தான் வேறாய்ப் பந்தங்களுக் குட்பட்ட ஓர் சடப் பொருளாக எண்ணிக் கொள்கின்றது. இது மட் பாண்டம் வேறு களிமண் வேறென அறிவிலார் கூறுவதை யொக்கும்.

191. முற்றறிவுடையதாய், விகார வேறு பாடில்லாததான சித்துப் பொருள், மேற்கூறிய கட்டுப்பாடுகளை வருவித்து அவற்றோடு கலந்து நிற்கும் தன்மை எதுபோலுமெனின், அக்கினி யானது தனக்கென வரையறுத்து வகுக்கப்பட்ட உருவில்லாததேனும், இரும்பைப் பற்றியக்கால் அவ்விரும்பின் கோலத்தையே பற்றுக் கோடா கப்பற்றி ஓர் உருவத்தைப் பற்றுதல் போலவா மென்க.

## முத்திக்கு வழி

192. மாணுக்கன் கேட்கின்றுன்:- ஐயனே! மயக்கத்தாலோ, அன்றி வேறேதுக்களாலோ சித்துப் பொருள் தன்னைச் சீவனென எண்ணி விட்டதெனக் கொள்வோம். கொள்ளின், இந்தப் பிறழ்வுணர்ச்சி அனுதிதொட்டே நிகழக்காண்டலின், ஆதியின்றியதற் கந்தமு மில்லாதே முடியு மன்ருே?

193. ஆதலின், சீவனுந்தன்மையும், ஈறில்லா ததாகப் பிறப்பிறப்பும் முடிவின்றிச் செல்கின்றன. எனின், ஆன்மாவின் வீடுபேறும் பந்த நீக்கமும் எஞ்ஞான்று வருமோ? என்னையாண்ட குரு மூர்த்தியே! எளியேற்கிதனை விளக்கியருளுமாறு திருவருள் செய்ய வேண்டுகின்றேன்.

194. குருநாதன் கூறுகின்ருர்:- அன்பனே! நன்று வினுவினுய். யான் கூறுவதைச் சிரத்தை யோடு கேள். மயக்கத்தாலுண்டாகிய இந்திர சாலம்போன்ற மனேசங்கற்பம் ஒரு மெய்ஞ்ஞானப் பொருளாகக் கணிக்கப் படமாட்டாது.

195. ஆனுல், இந்த மயக்கமும் இல்லாக்கால் குணம், குறி, செயலற்றதான பரமாத்துமாவுக் கும் காட்சிப் பிரபஞ்சத்திற்கும் யாதும் தொடர் பின்றி விடுமன்ருே!. எதுபோலுமெனின், நிற மில்லாத ஆகாயத்திற்கு எமது மனச்சங்கற் பத்தால் நீலவாகாயமென ஒரு நிறத்தைக் கற் பித்துக் கூறுதல் போலென்க.



196. குணங்குறியிறந்ததாய், செயலற்ற தாய், அறிவினறிவாய், ஆனந்த வெளியாயுள்ள ஆன்மாவுக்குச் சீவனுந்தன்மையாகிய நிலை புத்தி தத்துவத்திலே தோன்றும் மயக்கத்தால் உண்டா வதாகும். இந்த மயக்கம் சங்கற்பத்தினுலாய தாதலின், உண்மையியல்புடைய தொன்றன்று. அற்ருக்லின் மயக்கம் நீங்கியவழி, ஆன்மாவின் சீவனுந்தன்மையும் அழிந்துவிடுமென அறிவாய்.

197. அஞ்ஞானத்தின் பயனுக வந்த ஒரு மயக்கமாதலின், மயக்கம் உள்ள காலம் வரை சீவனுந்தன்மையும் நிலைபெறும். பழுதையைப் பாம்பென்பது உண்மையை அறியும்வரையன்ருே? உண்மையை அறிந்து பாம்பல்லப் பழுதையே யெனக் கண்ட விடத்துப் பாம்பொன்றில்லாத வாறு போலவே, சீவனுந்தன்மையும் மயக்கத்தாற் சங்கற்பிக்கப் பட்டதொன்றே.

198. 199. அவித்தையும் அதன் கூறுபாடு களும் அனுதியானவைகளாக எண்ணப்படுகின்றன. விவேகம் உதித்தவுடன் சொப்பனத்திற் கண்டவை விழித்தவுடனழியுந்தன்மை போல, அனுதியே யுள்ள தாயினும் அவித்தை மூலத் தோடழிகின்றது. இந்த உலகமும் ஆதியின்றிய தேனும் அந்தமில்லாத நித்திய பொருளல்ல.

200. 201. வித்தின் முளைபோல், சூக்கும மாயிருப்பதொன்று, தோற்றக் காட்சிக் கெளிதன் ருயினும், அழியுந்தன்மையையுடையது. அது போலச் சீவனுந் தன்மையும் புத்தி தத்துவங்களின் சார்போடு ஆன்மாவுக்குள்ளிருக்கும் ஒன்றெனக்

கணிக்கப்படினும், அதுமெய்ப் பொருளல்ல. ஆன்மாவோ, சீவனுந்தன்மையினின்றும் வேறு பட்டவொன்று. ஆன்மாவுக்கும் புத்தி தத்துவத் திற்கும் தொடர்பைக் கூறுதல் ஒரு மயக்கத்தால் வரும் பிறழ்வுணர்ச்சியேயாம்.

202. இந்த வஞ்சவுணர்ச்சியை ஞான வாயிலாகவன்றி வேறு வழிகளால் ஒழிக்க முடியாது. பரப்பிரமமும் சீவனும் அத்துவிதமாம் என்றறிந்த உணர்வே மெய்ஞ்ஞானமென நூல்கள் கூறுகின்றன.

203. இந்த உணர்வும் சடம் சித்து என்ற இருவகைப் பொருள்களின் தன்மைகளைப் பகுத்தறியுங்கால் வரும் நல்லறிவேயாம். ஆதலின் என்றுமழியாது நிலைக்கும் சித்தின் தன்மையையும் சீவனுந் தன்மையையும் அறியும் விவேகத்தையே ஒருவன் பெற முயலல் வேண்டும்.

204. எவ்வாறு கலங்கிய சேற்றுநீர் தெளிந்தபின் கலக்கமின்றிய நன்னீராகத் தோற்றுமோ, அவ்வாறே ஆன்மாவும் தன்னைப் பற்றிய (பரிசதோடம்) கறைநீங்கியவுடன் தன்னியல்பான தூய பிரமையுடன் விளங்கும்.

205. இவ்வாறு சங்கற்ப மாத்திரையானே வந்த கறை நீங்கியவுடன் சீவனுந்தன்மையையுடையதென எண்ணப்பட்ட ஆன்மாவே பரமான்மாவாக விளங்கக் காணலாம். ஆதலால் மாணவனே! சங்கற்பங்களும் அகங்கார மமகாரங்களும் இப்பரமான்மாவினின்றும் வேறனவை என்பதை உணர்ந்துகொள்.



206. நாம் முன்கூறிய விஞ்ஞானமய கோசமோ ஆன்மாவுமல்ல; விகாரப்படுவதாய, உணர்வற்ற, சடமாய, கண்டிக்கப்பட்டதாய, புலன்களாலறியப்படுவதாய், என்று முடனுறைவ தொன்றன்றாதலின் இதனை எவ்வாறு நிலையுள்ள ஆன்மாவிற்கு ஒப்பிடலாம்?

## ஆனந்தமய கோசம்

207. இன்ப வடிவினனும் ஏகனுமான ஆன்மாவின் சுயம்பிரகாசத்தின் பிரதிவிம்பத்தினின்றும் தோன்றும் ஓர் அஞ்ஞானரூப பரிவர்த்தனமே ஆனந்தமய கோசமெனப்படும். இன்பமடைதலே இதன் குணம். மனத்திற் குடன்பாடாகிய ஒரு பொருளை ஒருவன் தியானிக்குங்கால் இதன் உரு வெளித் தோற்றத்தைப் பெறுவான். சன்மார்க்க நெறி பிடித் தொழுகுவானொருவனுக்கு அவன் பக்குவம் நோக்கி இதுதானே வெளிப்படும். இதன் துணை கொண்டே சடப்பொருள்களும் தமக்குரிய இன்பத்தைப் பெறுவன.

208. சுழுத்தி நிலையின்கண்ணே தான், ஆனந்தமய கோசத்தின் முழுலீலையும் விளங்கும். சாக்கிர சொப்பனங்களிலோ நல்ல பொருள்களின் பார்வையாலும் நல்லெண்ணங்களின் தியானத்தினாலும் மாத்திரமே சிறுக வெளிப்பட்டுத் தோன்றும்.

209. இனி, இந்த ஆனந்தமய கோசந்தானும் ஆன்மாவல்ல. இதுவும் விகார வேறுபாடுகளையுடையது. மாயையின் சார்பானது. நல்வினையின்

காரியமாயது. மற்றும் அழியும் குணம் வாய்ந்த கோசங்களினூடே கிடக்கின்றது.

210. இவ்வாறே பஞ்ச கோசங்களையும் நியதிகளைந்து அப்பால் சிந்தையுமெட்டாச் சேணிடைச் சென்றால் ஆனந்த வறிவுருவமாய் இவற்றிற்கெல்லாம் சாட்சியாய் விளங்கி நிற்கும் ஆன்மாவைக் காணலாம்.

211. மூவா விளநலத்தோடு மலரகிதனாய், விகாரமற்றவனாய், உண்மைப் பொருளானவனாய், முக்குணங்களுடனிருந்தும் அவற்றின் வயப்படாத வனாய், பஞ்சகோசங்களின் வேறானவனாயுள்ள வனும், சுயம்பிரகாசனுமான ஆன்மாவைத்தான் ஒரு ஞானி தானே அவன் எனக் காண்பன்.

## ஆத்ம சொரூபம்

212. மாணாக்கன் வினவுகின்றான்:-

ஐயனே! இவ்வாறு எல்லாவற்றையும் 'இதுவல்ல இதுவல்ல' என நீக்கிச் சென்றால், ஒன்று மிலாத வெறும் சூனியமான ஒரு பாழ்வெளியே காணக்கிடப்பதன்றி, வேறு ஒன்றையும் காண்கிலேன். பின், ஞானி தானும் அவனும் ஒன்றெனக்காண அங்கு நிலைத்திருக்கும் உண்மைப் பொருள்தான் யாதோ? தேவரீர் கூறியருள வேண்டும்.

213, 214. அன்பனே! நன்று கடாவினாய்! நீயே விவேகமுடையவன். நான் எனது என்னும் அகங்கார மமகாரங்களையும் சுழுத்தி முதலிய



அவத்தைகளையுங் காட்டித் தான் அவற்றாலறியப் படாது நிற்கும் சத்தி எதுவோ அதுவே அறிவாகிய ஆன்மாவென உன் நுண்மதியில் நுனித்தறிந்து கொள்.

215. எப்பொருள் வேறொரு பொருளாற் காணப்படுகின்றதோ அக்காணும் பொருளே சாட்சியாய் நிற்கின்றது. ஒரு பொருளைக் காண்பதற்கென அந்நியமாக வேறோர் பொருளில்லாதவிடத்து அப்பொருளைக் கண்டோம் எனச் சாட்சி கூற முடியாதன்றோ?

216. ஆன்மாவோ தானே தன்னையறியும் சத்துப் பொருள். ஆதலால், ஆன்மாவும் சீவனும் அன்னியமில்லாப் பொருள்களேயெனக் காண்.

217. சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி எனும் மூன்றவத்தைகளிடத்தும் விளங்குவதாய மனத்தாற் பல்வேறு உருவங்களோடு தியானிக்கப் படுவதாய புத்தி தத்துவத்திற்கும் அப்பாற்பட்டதாய சச்சிதானந்த சொரூபத்தோடிருப்பதெதுவோ அதுவே நீ. அதுவே உன் இருதய கமலத்துள்ளிருக்கும் ஆன்மாவென அறிந்து கொள்.

218. குடத்தின் கண்ணுள்ள நீரிலே பிரகாசிக்குஞ் சூரியன் பிரதிவிம்பத்தை (நிழலை)க் கண்டு அறிவிலி இதுவுமோர் சூரியனே என்பான். அவ்வாறே அஞ்ஞானியும் மயக்கத்தால் எழுந்த மனச் சங்கற்பத்தில் புத்தி தத்துவத்திற் பிரகாசித்த ஆன்மாவின் விம்பத்தைக் கண்டு தானும் அவ்விம்பமும் ஒன்றேயெனப் பிதற்றுவன்.

219. அறிவுடையானொருவன் எவ்வாறு மட்குடத்தையும் அதனுள் இருக்கும் நீரையும் ஆங்குப் பிரகாசிக்குஞ் சூரியனையுந் தள்ளிக் குடம் நீர் விம்பம் இவற்றுக்கெல்லாம் ஒளியைக் கொடுத்துத் தானே சுயம்பிரகாசனாய் விளங்குஞ் சூரியனையே காண்பானோ,

220, 221, 222. அவ்வாறே தூலதேகத்தையும் புத்திதத்துவத்தையும் சித்தின் விம்பத்தையுந் தள்ளித் தானே தானாய், உள்ளும் புறம்புமில்லாததாய், நுண்ணியதின் நுண்ணியதாய், எங்கும் உள்ளதாய், நித்தியமாய், தூலசூக்குமங்களின் வேறாய், புத்தி தத்துவத்தினின்றும் விரியும் அவற்றிற்கும் காரணப் பொருளாய், எல்லாவற்றையும் தானே காண்பதாயுள்ள ஒன்றின் உண்மையியலை அறிவன். அவ்வாறு அறிந்தவனே பிறப் பிறப்பாகிய அழுக்குகளை நீக்கியவனாய் ஆனந்த வடிவினனாகின்றான். ஞானஒளி பெற்றானுக்கு எவரிடத்தும் அச்சமில்லை. வீடு பேற்றை விழைவானுக்குத் தன் மெய்யியல்பை அறிதலிலும் வேறு மேலான செயலில்லை.

223. தானே பிரமப் பொருளாகிய ஆன்மாவென அறிந்து அதனை அனுபவத்திற் காண்டலே சம்சாரமென்னும் பந்தங்களினின்றும் விடுவிக்க வல்ல நல்லேதுவாகும். அதன் வாயிலாகவே ஒருவன் உயர் வொப்பில்லா ஆனந்த வடிவாய பிரமமாகின்றான்.

224. ஒருகாற் பிரமமே தான் எனக்கண்டவன், பின் இப்பிரபஞ்சத்துட் படமாட்டான், ஆகையால், ஆன்மாவுந் தானும் ஒன்றென்றே ஒருவன் உறுதியாக நினைக்கவேண்டும்.



225. பிரமமோ, என்றும் உள்ள பொருளாய், அறிவுருவாய், ஏகமாய், மலரகிதமாய், தன்வயமுடையதாய், சீவனோடு வேறாகாததாய், அகம் புறம் எனும் பாகுபாடில்லாததாய் உள்ளது.

## சர்வம் பிரமம்

226. இந்த ஆன்மாவையன்றி வேறொரு மேலான பொருளில்லையாதலால், இதுவே உண்மையான மெய்ப்பொருள்.

227. எம் ஊனக்கண்ணிற்குப் பல்வேறு உருவங்களோடு கூடித்தோன்றும் இவ்வுலகம் வாக்குக்கும் மனத்திற்கு மெட்டாத பரப்பிரமத்தின் வடிவமேயன்றி, வேறல்ல.

228. மண்ணாலாகிய குடம் வடிவத்தால் வேறேபோலத் தோன்றினும், மண்ணின் வேறல்ல. பின், அதனைக் குடமென்பதெல்லாம் நாம மாத்திரையினன்றி வேறல்ல.

229. குடத்தின் இயல்பு அதன் முதற்காரணமான மண்ணினின்றும் வேறாயதெனக் காட்டவல்லாரில்லை. ஆகையால், குடமென்பது சங்கற்பமேயாக மண்ணே மெய்ப்பொருளாய்க் குடமெங்குஞ் செறிந்து விளங்கும்.

230. அதுபோல, காரியப்பொருளாகிய உலகமும், முதற்காரணமான ஆன்மாவின் வேறல்ல.

அதன் இயல்பு அதுவே. அதையின்றிப் பிரபஞ்ச மில்லை. அவ்வாறு உலகமென்பதோர் பொருள் உண்டெனக் கூறுபவன் தூக்கத்தில் வாய்புலம்புவானொப்ப, இன்னும் மயக்க வசப்பட்டவனே யாதல் வேண்டும்.

231. உண்மையாக, இப்பிரபஞ்சமே பரப் பிரமமென அதர்வணவேதம் முழங்குகின்றது. ஒன்று வேறொன்றாகச் சங்கற்பிக்கப்படின், அச் சங்கற்பத்திற்கு முதற்காரணமாயுள்ள பொருள் சங்கற்பிக்கப்பட்ட பொருளினின்றும் வேறாவ தெங்ஙனம்?.

232. உலகம் நித்தியப் பொருளானால், துவித பாவனை நீங்குமாறில்லையாக, வேதாகமங்களின் கூற்றுக்களும் பொய்யேயாகக் கடவுளும் பொய் புகன்ற பாவத்துட்படுவர். இவற்றினொன்றை யேனும் அறிவாளிகள் ஏற்றுக்கொள்வாரல்லர்.

233. இந்த உண்மைகளை எமக்கறிவுறுத்தவே கடவுளும் வேத நூல்களிலே, தான் உலகமேயா யினும், தான் அவற்றின் வேறு எனக் கூறியிருக் கின்றார்.

234. உலகம் மெய்ப்பொருளேயாயின் நித் திரையின்கண்ணும் அது காணப்பட வேண்டு மன்றோ? ஆண்டு அது காணப்படாமையின் அது கனவைப்போன்ற ஒரு பொய்ப்பொருளேயாம்.

235. உலகம் சித்துப்பொருளின் வேறாயதல்ல. அவ்வாறு வேறாகத் தோற்றும் காட்சி, நிற மில்லாத வாகாயத்திற்கு நீலநிறம் ஒன்றைக் கற் பித்தல் போல, ஒரு கற்பனையளவேயாம். முதற் காரணத்தினின்றுந் தோற்றிய காரியப்பொருள் அதனினின்றும் வேறாய இயல்புடையதோ? இல்லை. ஆதலின் முதற்காரணமான பரப்பிரமமே மயக் கத்தாற் பிரபஞ்சம் போலத் தோற்றுகின்றது.



236. நல்லறிவின்றிய ஒருவன் பார்ப்பதெல் லாம் (அவனுக்கு வேறாகத் தோன்றினும்) பிர மத்தையேயாம். இப்பியே யன்றி ஆங்கு வெள்ளி யென்பதொன்றில்லை. பிரமமே உலகம். பிரமத் தின் வேறாக உலகம் உண்டெனக் கூறுவதெல்லாம் பெயர் மாத்திரையானேயாம்.

## பிரம நிரூபணம்.

237. 238. ஆகையால் எப்பொருள் எவ் வண்ணமாகத் தோன்றினும், அப்பொருள் மாயை யின் காரியமாகிய அஞ்ஞானத்தின் கட்டு வீடு களுக்கப்பாற்பட்ட பரப்பிரமத்தின் வடிவமே.

239. மெய்ஞ்ஞானிகள் பரப்பிரமத்தை அதன் உண்மை வடிவிற் கண்டுள்ளார்கள். அந்நிலையில், அது காண்பான், காட்சி, காண்பொருள் என்ற பேதமின்றி, அறிவொளியாய், அகண்டாகாரத் தனிப் பொருளாய் விளங்கும்.

240. அப்பொருள் வாக்கு மனதிகட்கெட்டா ததாய், வடிவிறந்த பூரணமாய், வந்துபோதலின்றி என்றும் உயிருக்குயிராய் விளங்கிநிற்கும் பெருமை வாய்ந்தது.

## மகாவாக்கிய ஆராய்ச்சி

241. 242. வேதங்களிலே "த த் து வ ம சி" என்னும் வாக்கியம் அதுவே நீயானாய் என, அது வேறு நீ வேறு எனவே குறிக்கின்றதன்றோ என் பாயானால், அறியாது வினாவினாய்! தத்துவமசி என்னும் மகாவாக்கியத்தில் பரப்பிரமமும் சீவனும் ஒன்றென்பதை வற்புறுத்துவான் வேண்டிக் கூறப் பட்டதேயன்றிப் பின் ஒன்றினோடொன்றொவ்வாத வியல்புடையனவாய சூரியன், மின்மினி, அரசன், ஊழியன், ஆழி, கூவல், மேரு, அணுவென்னும் இவற்றைப்போலப் பரப்பிரமமும் சீவனும் ஒரு தன்மைத்தாயவையெனக் கூறவும்படுமோ?

243. இந்த ஒப்பின்மையும் சங்கற்பத் தாலுண்டாயதே யல்லாமல் உண்மையானதல்ல. இந்தச்சங்கற்பம் கடவுளைப்பற்றிக் குறிக்குங்கால், அசுத்த மாயை முதல் தூலதேக மீறாயுள்ள வற்றிற்கெல்லாம் காரணமாய மாயையிலுண்டா யது. இனி சீவனைக் குறிக்குங்கால், மாயையின் காரியங்களாகிய பஞ்சகோசங்களாலுண்டாயது.

244. இவ்விருவகைச் சங்கற்பங்களுமே கடவுளையும் சீவனையுங் குறித்து நிற்கின்றன. இவற்றை நீக்கியவழி, கடவுளுமில்லை; சீவனு மிலலை. எவ்வாறெனில் ஓர் அரசு அரசன் ஒருவன் உளன் என்றும், ஓர் கேடயம் போர் வீரன் ஒருவன் உளன் என்றும் காட்டிப் பின் இவற்றை நீக்கிய காலத்து அரசனும் போர்வீரனுமில்லா தொழிந்த வாறுமென்க.



245. வேதங்களும் துவித பாவனையைக் கண்டிக்கின்றன. ஆதலின், வேத வாக்கியங்களின் துணையானே இச்சங்கற்பங்களை அகற்ற முயல வேண்டும்.

246. இந்தத் தூல உலகமேனும், சூக்கும மாயிருக்கும் உலகமேனும், ஆன்மாவல்ல. இவை கனவைப்போலவும், கயிற்றிலரவம் போலவும், பொய்யாய்க் கழிகின்றன. இவ்வாறு வெளித் தோற்றங்களைக் களைந்து, பின் கடவுளுக்கும் தனக்குமுள்ள மெய்யியல்புகளை ஒருவன் உணர வேண்டும்.

247. ஆகையால், கடவுள் சீவன் என்னு மிருபதங்களின் மெய்ப்பொருள் யாதென வூன்றி நோக்க வேண்டும். ஒன்றை நோக்குங்கால் யாதும் பயனற்றதென முற்றாய் நீக்கவுஞ் செய்யாது, அன்றி ஆராயாது முற்றும் உண்மையெனக் கொள்ளவுஞ் செய்யாது, ஆராய்ந்து உண்மை யைக் காணவேண்டும்.

248. 249. "இதுவே அந்தத் தேவதத்தன்" என்புழிக் காலம் இடம் முதலிய வேறு காரணங் களைக்குறியாது ஒருவனையே பற்றிக் குறிப்பது போல, "நீயே அதுவானாய்" என்னும் வாக்கியத் திலும் ஏனைக்குணம் குறிகளையெல்லாம் நீக்கிக் கடவுளினதும் சீவனினதும் இயல்புகளாகிய சச்சி தானந்த நிலையொன்றையே குறிக்கொள்ள வேண்டும்.

## பிரம தியானம்

250. "அது உருவமற்றது" என்ற வாக்கியத் தில், சடமாகிய உருவத்தை நீக்கி "அது"

என்பதை உணர்வது போல, இது காறும் நீ என எண்ணிப் போற்றி வந்த தேகத்தைச் சடமெனத் தள்ளி, 'நீயே அவனுனாய்'' என்ற மகாவாக்கியத்தின் உண்மையறிந்து, உன்மெய்யியல்பாகிய அறிவொளியை உன்னுள்ளே காண்பாயாக.

251. மண்ணாலாய பாண்டம் முட்டி சட்டி முதலியவற்றிற்கு மனமானது பாண்டம் முதலிய பேர்களையிட்டாலும், உண்மையில், அவை மண்ணே! அதுபோலப் பரப்பிரமத்தினின்றும் வந்த இப்பிரபஞ்சமும் பரப்பிரமமேயாம். பிரமத்தையன்றி வேறுபொருள் உலகில் இல்லையாதலின், நீயும் அப்பிரமமென அறிந்துகொள்.

252. கனவின்கட் டோற்றப்படும் பொருள்களும் காண்பனவும் காலமும் இடமுமென்றிவையெல்லாம் பொய்யாதல் போல நனவின் கண் நாம் காணும் உலகமும் மித்தையே! இவையெல்லாம் மயக்கத்தால் விளைவன. இந்தத் தேகமும் இந்திரியங்களும் பிராணவாயுக்களும் நிலையற்றனவெனக் காண்டலின் நீயே அந்தப் பரப்பிரமம்.

253. ஒன்று இன்னொன்றினுளடக்கம் என்பதை நாம் ஆராயுங்கால், அந்த ஒன்றென்பது எல்லாவற்றிற்கும் மூலகாரணமான பொருளே.

## தியான உத்திகள்

254. சாதிபேதங்கள் கடந்ததாய், பிறப்பிறப்பற்றதாய், நாமரூபமில்லாததாய், புண்ணியபாவங்களில்லாததாய், காலங் கடந்ததாயுள்ள, பரப்பிரமமே நீ. மாணவ! இதை நீ உன்சித்தத்தே ஊன்றித் தியானஞ் செய்வாயாக.



255. வாக்கிற் கெட்டாததும், ஞானவொளியிற் கண்டு இன்புறக்கூடியதும், மலரகிதமானதும், அறிவுருவானதும், ஆதியுமந்தமுமில்லாததுமான பரப்பிரமமே நீ. ஊன்றித்தியானஞ் செய்.

256. பசி, திரை, நரை முதலியவற்றாற் பந்திக்கப்படாததாய், யோகியின் இருதயகுகைக்குள் விளங்குவதாய், இந்திரியங்களாலறியப் படாததாயுள்ள பிரமம் நீயே.

257. மயக்கத்தின் சங்கற்பங்களாகிய பிரபஞ்சத்தின் தோற்றவிரிவுகளுக் கெல்லாம் மூலகாரணமாயிருந்தும் தானவற்றாற் றாக்கப்படாததாய், தன்னொப்பார் பிறரில்லாததாயுள்ள பிரமம் நீயே.

258. பிறப் பிறப்பற்றதாய், என்று முள்ளதாய், படைத்தல், காத்தல், அழித்தலாதி முத்தொழில் புரிவதாயுள்ள பிரமம் நீயே.

259. விகாரமற்றதாய், என்றும் விளங்குமியல்புடையதாய், சலன மற்றதாய், அநாதியே மல சம்பந்த மில்லாததாய், அபின்ன மாயுள்ள பிரமம் நீயே.

260. ஒன்றே யெனினும் பல முளைத்தற்கிடமாய், மாயையின் வேறாய், சுவதந்திர முடையதாயுள்ள பிரமம் நீயே.

261. இரண்டற்றதாய், எல்லை கடந்ததாய், அழிவில்லாததாய், உலகத்தின் வேறாய், நித்தியானந்த ரூபமாயுள்ள பிரமம் நீயே.

262. ஒன்றேயாயினும், பொன்னும் பணியும் போல, நாம ரூபங்கள் குணங்கள் விகாரங் களுடன் மயக்கத்தின்பாற் பட்டோர்க்குத் தோன்றும் அந்த ஒரு பொருள் நீயே.

263. தனக்கு மேலொன்றில்லாததாய், அசுத்த மாயைக் கப்பாற்பட்டதாய், உயிர்க்குயிராய், விகாரமற்றதாய், அகண்டிதமாய் மாருவியல் புடையதாயுள்ள பிரமம் நீயே.

264. ஓ! மாணவனே! மேற்கூறியபடி ஒருவன் தன் அறிவின் துணையால் கற்றகல்வியின் பயனைக் கொண்டு உள்ளத்தே தியானிப்பானுயின் கையின் கண் நெல்லிக்கனிபோல ஐயமின்றியே மெய்யினை யுணர்வன்.

265. அஞ்ஞானமான, மாயையின் காரியங் களான புறப்பொருள்களைக் களைந்து, ஒரு சேனை யின் நாப்பண் நிற்கும் அரசனை அச்சேனுவீரரின் வேருயுணர்வது போல உன்மெய்யியல்பைக் கண்டு அதனை உறுதியாகப்பற்றி நின்று, பின் இந்த உலகமும் பிரமமும் ஒன்றெனக் காண்.

266. புத்தி என்னும் குகையின் கண்ணே உலகப்பொருள்களின் வேருய், தன்னெப்பாரின்றிய ஒரு தனிமுதல்வனுளன். இந்தக் குகையின் கண்ணே தானும் பிரமமெனச் சிவோகத்திருப் பவன் மீட்டொருகால் தாயின் கருவாகிய அச்சிறிபடான்.

## வாசனுமல நீக்கம்.

267. தானே பிரமம் என்ற உண்மையை அறிந்த பின்னும் தான் காண்பான் எனவும்



தான் ஒரு கருவி எனவுங் கொள்ளும் எண்ணம் உதிக்கின்றது. அதுவே பிறப்பைக் கொடுக்கும். இந்த எண்ணத்தைத் தானும் பரமாத்மாவும் ஒன்றென எண்ணிச் சதாதியானித்தலாகிய சிவோகம்பாவனையால் மாத்திரம் நீக்கலாம். இவ்வித்மான நிலையையே மேலோர் வாசனுமலத் தின் தேய்வுநிலை என்பர்.

268. சடப்பொருளாகிய தேகத்தையும் கரணங்களையும் யான் எனது என அபிமானிக் கும் மயக்க உணர்ச்சியை இச்சிவோகம் பாவனை யால் நீக்கிவிட வேண்டும்.

269. புத்தி தத்துவத்தின் காரியங்களாகிய வற்றிற்கெல்லாம் சாட்சியாயிருக்கும் தன்னைக் கண்டு தானும் பரப்பிரமமும் ஒன்றே "நானு மவனுமொன்றே" என்று சதா தியானிப்பவன் சடப்பொருளைத் தானென அபிமானித்தலை ஒழிப்பன்.

270. தாய் தந்தை யென்ற கூட்டத்துற வையும் தேகத்தைப் போற்றி வளர்க்கும் அவா வையும் நூல்களில் நூலப் பொருள்களைப் பற்றி நிற்பதையும் ஒழித்து நீ பிரமமல்லவெனக் கொண்ட மயக்கத்தை வெல்வாய்.

271. உலகைப் பற்றி நடக்கவும், நூல்களைக் கற்கவும், தேகத்தை வாடாது வளர்க்கவும், ஆசை கொண்டாயானுல், உனக்கு உண்மையறிவு தலைக் கூடாது.

272. உலகமென்னுந் துக்க சாகரத்தினின்றும் கரையேற விழைவானொருவனுக்கு மேற் கூறிய மூவகை ஆசைகளும் இருப்புச்சங்கிலிகளாகி அவன் பாதங்களைப் பிணித்துக்கொள்கின்றன என மேலோர் கூறுவர்.

273. புலால் கமழும் நீராலும், வேறு முடைப் பொருள்களாலும் மூடப்பட்டுத் தன் மணங் கமழாது கிடக்கும் சந்தனக்கட்டை எவ்வாறு புறமணம் நீங்கத் தேய்ந்துழித் தன்மணங் கமழுமோ,

274. அவ்வாறே மனத்தின்கண்ணே ஊழி காலமாக நிறைந்து கிடக்கும் துருவை அறிவென்னுங் கருவியால் இடைவிடாது தேய்க்க ஆன்மாவின் பூரண நன்மணம் வீசும்.

275. தன்னையறியும் நாட்டம் புறப் பொருள் களின் மேலுள்ள பற்றுக்களால் தடைப்பட்டு நிற்கும். தன்னை நாடிப் புறப்பொருள்களின் பற்றையறுத்தவிடத்து ஆன்மா தானாகவே வெளித்தோன்றும்.

276. மனமானது ஆன்மாவிலே, அதன் தியானத்திலே மூழ்கிக் கிடப்ப, புறப் பொருட் களின் பற்றுமறவே, தடையிலா ஞானமாகிய ஆன்ம தெரிசனம் உண்டாகின்றது.

### அத்தியாச நீக்கம்

277. ஒரு யோகி சதாகாலமும் பிரமத்தின் தெரிசனையின்கண் மூழ்கிக் கிடப்பதால், அவன் மனமிறந்து விடுகின்றது. இறந்தவுடன் ஆசை யறுகின்றது. அதுபோல உன் மனச் சங்கற்பத்தை நீ நீக்கிவிடுவாயாக.



278. தமோகுணச் செயல்கள் சாத்துவிக ராசத குணங்களாலும், இராசத குணச் செயல்கள் சாத்துவிக குணத்தாலும் அழிய, சாத்துவிக குணமோ சுத்தமான தனி நிலையின்கண்ணே யழிகின்றது. ஆதலின், சாத்துவிக உதவிகொண்டு சங்கற்பங்களை யறு.

279. பிராரத்துவ கன்மம் உள்ளவரை, தேகம் நிலைபெறுமென்பதை அறிந்து சாந்தனா யிருந்து திடத்தோடு உலகத்தை வெல்லு.

280. நான் சீவன் அல்ல, நானே பிரமம் என எண்ணிச் சடப்பொருள்களின் பற்றை நீக்கி, முற்பிறவிகளிலே செய்துள்ள கருமங்களின் வேகத்தால் வந்த மயக்கத்தையொழி.

281. ஞான நூற் கேள்வியாலும், புத்தி யாலும், அனுபவ ஞானத்தாலும், நீயே அந்தப் பிரமமென அறிந்து ஓர் அணுவளவேனும் மயக்க மின்றித் தெளி.

282. ஞானிக்குத் தான்செய்யுங் கிரியை களில் யாதும் தொடர்பில்லை. ஏனெனில், அவன் விருப்பு வெறுப்பின்றிய வேண்டுதல் வேண்டா நிலையிலுள்ளான். அஃதேபோல் நீயும் பிரமத்திலே மூழ்கிக்கிடந்து புறப்பொருள்களின் மயக்கை யறு.

283. பிரமமும் நீயும் ஒன்றென உணர்ந்து "தத்துவமசி" என்ற வாக்கின் பயனை நன்கறிந்து நீயும் பிரமமும் ஒன்றேயென்ற நிலையை நாட்டி மயக்கத்தையறு.

284. நீயும் தேகமும் வேறெனக் காணும் வரை சிவோகம் பாவனையில் மூழ்கி மயக்கை யொழி.

285. இந்த உலகத்தினதும், சீவனினதும் எண்ணம், கனவின் கண்ணுவ்து வந்து வருத்தா வண்ணம் சிவோகம் பாவனையில் மயக்கையொழி.

286. நித்திரையின் கண்ணேனும் உலகப் பொருள்களில் நாட்டம் வைத்தேனும், மறந் தேனும் மயக்கத்திற் கிடங்கொடாது உன் மனத் தகத்தே பிரமத்தை வைத்து அதன் தியானத்தி லீடுபட்டிரு.

287. சுக்கில சுரோணிதக் கலப்பால் வந்த தும், ஊன் இரத்தம் முதலிய முடைப் பொருள் களால் ஆக்கப்பட்டதுமான இத் தேகத்தை, ஒரு தூர்த்தனை எவ்வாறு தூரத்தே தள்ளி வைக்கின்ருயோ அவ்வாறு தூரத்தள்ளி நீயே பிரமமென எண்ணி உன் பிறப்பாலாகிய பெரும் பேற்றை யடைவாயாக.

288. ஓ! அறிவனே! கண்டிக்கப்பட்டதான சீவனை அகண்டிதமான பரமான்மாவுடன் கலக்கச் செய்து (பராகாயத்துடன் குடாகாயத்தைக் கலந்தாலொப்ப) இரண்டும் ஒன்றெனும்பாவனையி லாழ்ந்து சாந்தனுயிரு.



289. எல்லாத் தோற்றங்களுக்கும் மூல காரணமாய்ச் சோதிமயமாயுள்ள பிரமம் நீயே யென எண்ணி அண்டபிண்டங்களாகிய இரு வகைப் புலாற்பாண்டங்களையும் தள்ளிவிடு.

290. இதுகாறும் தேகத்திடை நீ கொண்ட பற்றைச் சச்சிதானந்தப் பொருளான பிரமத்திடஞ் செலுத்திச் சூக்கும தேகாதிகளின் பற்றையும் நீக்கி ஒன்றினும் பற்றுக்கோடில்லாத தனிப் பொருளாயிரு.

291. ஒரு கண்ணுடியில் ஒரு பட்டினம் முழுவதும் எவ்வாறு பிரதிவிம்பித்துத் தோற்றுமோ அவ்வாறே இப்பிரபஞ்சம் முழுமை யும் விம்பித்து நிற்றற்கு இடந்தந்து நிற்கும் பிரமமே நீ. இதை நீ யறிந்தாயாஞல் உன் பிறப் பினுலாம் பயனைப் பெற்றவனுவாய்.

292. உண்மையானதும் உருவங் குணங்குறி கடந்ததுமான பரப்பிரமம் தானேயென அறிந்த பின் கோலம் பூண்டு, கூத்து நடிக்கும் ஒருவன், கூத்து முடிந்தவிடத்து தான்வேறு கோலம் வேருதல்போலச் சடப்பொருள்களிற் பற்றுவைத் துத் தானே தேகமென அபிமானிக்க மாட்டான்.

## "நான்" என்பதன் பொருள் விளக்கம்

293. இப்பிரபஞ்சமும் அதன்மேற்கொண்ட அபிமானமும் நில்லாதழிதலின் மெய்ப்பொருள் களல்ல. அழிதன்மாலேயனவாய அகங்காரம் ஆதிய வற்றுல் "நான் எல்லாம் அறிவேன்" என்னும் சொல்லின் உண்மை எவ்வாறு விளங்கும்?

294. உண்மையில் "நான்" என்பதுதான் யாதோவெனின், அகங்கார மாதியானவற்றைக் கண்டு அவற்றின் சாட்சியாய் விளங்குமதுவே யாம். அது என்றுமுள்ளது; நித்திரையின் கண்ணு முள்ளது. நூல்களும் அது பிறப்பிறப்பற்றது எனக் கூறுகின்றன; ஆகையால் பரமாத்மா தூலசூக்கும தேகங்களின் வேறானதொன்றே.

295. மாறுபாடடையும் பொருள்களின் இயல்புகளையறிபவன் விகாரமின்றியும் தான் மாறுபாடுறாதவனாயுமிருக்க வேண்டும். சுழுத்தியில் சூக்கும தேகமும், கனவில் தூலதேகமும் காணப்படாமையால் தூலசூக்கும தேகங்கள் அநித்தியமெனக் காண்கின்றோம்.

296. ஆகையால், புத்தியாலறியப்படுவதும், ஊன் பொதிந்த கூடாகியதுமான தேகத்தினதும் நான் எனும் அபிமானத்தினதும் பற்றை நீக்கி, நெருநலா யின்றாகி நாளையாகி நின்றுநிலவும் பிரமம் நீயே என அறிந்து சாந்தியடைவாயாக.

297. ஒரு ஞானிக்கு, புன்புலாற்றோற்றுருத்தியாகத் தோன்றும் இத்தேகத்தோடு சம்பந்தமான நாமரூப பேதங்களும், ஆச்சிரமப் பாகுபாடுகளும் ஒற்றுமையுடைய பொருள்களல்லவென நீ கண்டு, நீயே காண்பவனும் கருவியுமென்ற எண்ணத்தை நீக்கி ஆனந்தரூபமான தனிப்பொருளே நீயெனக் கண்டு அவ்வாறிரு.

298. பிறப்பிற் செறிக்கும் வேறேதுக்களும் மனிதனுக்குண்டு. ஆனால் ஆணவமே மூல காரணமாயுள்ளது.



299. இந்தக் கேடுவிளைக்கும் ஆணவத்தின் சம்பந்தமுள்ளமட்டும் ஒருவன் தனிப் பெரும் பொருளான வீடுபேற்றை நாடவேண்டியதில்லை.

300. பகைக்கிரகமாகிய இராகுவின் வாயினின்றும் விடப்பட்டசந்திரன் எவ்வாறு தன் முழுவொளியையுங் காணுவானோ அவ்வாறே ஆணவமாகிய இருளினின்றும் தப்பியபின்னர் ஒருவன் தன் தூய நிலையைப்பெற்றொளிர்கின்றான்.

301. புத்தி தத்துவத்தினின்றும் தோன்றி அஞ்ஞானத்தால் வஞ்சிக்கப்பட்டு "நான் இப்படியிருக்கின்றேன்" என்று தருக்கும் அகங்காரம் அழிந்த காலத்துத்தான் ஒருவன் பிரமத்தோடைக்கியப்பட்ட நிலையையெய்துவன்.

302. பிரமானந்தமாகிய நிதிக்குவை, அகங்காரமெனுங் கடுவிடப் பாம்பினாற் சுற்றப்பட்டு முக்குணங்கள் எனும் முத்தலைகளாற் காக்கப் பட்டிருக்கின்றது. இறவாத வின்பமாகிய விப்பெருந்திருவை யெய்துவான் விழையுமொருவன், வேதாகமமாதி மெய்ந்நூல்களிலே விரித்துரைத்த உண்மைகளை விரும்பிக்கற்றுக், கற்றதை நன்கு மனத்தே சிந்தித்துத் தெளிந்து, அதனாலாகும் மெய்யுணர் வாகிய வாளினால் அக்கொடு நாகத்தின் தலைகளைக் கொய்துவிட வேண்டும்.

303. கடுவிட முண்டானொருவனுக்கு, அவ்விடத்தின் ஓர் அணுவேனும் உடம்பின் கண்ணே தங்கியிருப்பின் அவன் உயிர் பிழைத்தலரிது. அவ்வாறே, வீடுபேற்றின்பத்தை விழைந்த ஞானியும் அஞ்ஞானத்தை மூலவேரோடழிக்க வேண்டும்.

304. அஞ்ஞானவிருளை ஓட்டி, அதனால் உண்டாகும் ஐயம், திரிபு, மயக்கமாதியனவற்றி னின்றும் தெளிந்து உயிர்க்குயிராய பரப்பிரமத் தைத்தன்னுள்ளே கண்டு, தானும் பிரமமும் ஒன் றெனக் கண்டவனே "நானே இது" எனக்கூற அதிகாரியாவன்.

305. நீ ஆனந்த ரூபமான பிரமத்தோ டொப்புடையையாயினும், உன்னைப் பன்னாளிப் பிறப்பிறப்பிற்படுத்தி அந்தப் பிரமத்தோ டைக்கி யப்பட் டின்புறவிடாது அலக்கணுறச் செய்த அகங்காரத்தோ டுனக் குண்டாய பற்றை இன்றைக்கே நீக்கக்கடவாய்.

306. அந்த அகங்காரத்தோடு நீ அபிமானித்து நில்லாக்கால், களங்கமற்றதாய், எங்கும் வியாபக மாய், எவ்வுயிர்க்கும் அறிவொளியாய், என்றும் ஒரே படித்தாய், நிர்விகாரமாயுள்ள உனக்கும் பிறப் பிறப்பாகிய பேரிடர் வருமோ?

307. நல்லுணவுண்கின்றான் ஒருவனுக்குத் தொண்டைக்குள் சிக்கிக் கொண்ட முட்போல, உனக்குப் பேரிடர் விளைக்கும் பகைவனே போன்ற இவ்வஞ்ஞானத்தை யழித்து, உனக்குரிமையான ஆனந்த பதவியாகிய அரசுரிமையை உடனே பெறமுயல்வாய்.

308. அஞ்ஞானத்தின் தொழில்களாகிய "நான்" "எனது" என்பவற்றை யடக்கிப் பரப் பிரமத்தை மெய்யுணர்வாற் கண்டு அப் பிரம ஞானவின்பத்தோ டொன்றியக்கால், துவித பாவனையை முற்றாய் நீக்கிநில். அப்போது உன் அகண்டிதநிலையை நன் கறிந்தவனாவாய்.



309. இந்த மயக்கத்தைத்தரும் பேரிருள் முற்றாகக் களையப்பட்டதே யானாலும், ஓர் இறைப் போழ்தேனும் மனமானது இதைப்பற்றிச் சிந்தித் தால், அச்சிந்தனையின் பயனாக, மாரிக் காலத்து முகிற்கூட்டங்கள் சிறியனவே யாயினும் நீரைப் பொழிந்து இடர் விளைப்பன போல, நீ கணக் கற்ற இடர்களுக்குட் படுவாய்.

310. இந்தப் பகைவனை வென்றபின், ஒரு நிமிடமேனும் புலன் வழியே சிந்தையைச் செல்ல விடலாகாது. அவ்வாறு செய்யின், பட்டுவரும் மரத்திற்கு நீர் வார்த்து வளர்ப்பதை யொக்கும்.

311. தேகாபிமானம் கொண்டவனே ஐம்புல நுகர்ச்சியிலாசைகொள்வான். தேகப்பற்றற்றவன் ஆசையறுத்தவனாகின்றான். ஆதலின், புலன்வழிச் சேறலே பந்தத்திற் கேதுவாகின்றது.

312. காமியச் செயல்கள் பக்குவப் பட்ட விடத்தே ஐம்புலநுகர்ச்சியின் ஆசை வெளிப்படும். ஆதலின், அச்செயல்களை நீக்கினால் ஆசையும் அழியும்.

313. ஆசையால் காமியச் செயல்களும், காமியச் செயல்களால் ஆசையும் உதிப்பதால் மனிதனின் பிறப்பிறப்பிற்கோ முடிவில்லை.

314. பிறப் பிறப்பாகிய சங்கிலித் தொடரை யறுக்கமுயலும் துறவி, புலன்வழியே மனத்தை விடுவதும், காமியச்செயல்களைச் செய்வது மான கிரியைகளைச் செய்யாது விடவேண்டும்.

315. 316. ஐம்புலன் வழிச்சேறல், காமியச் செயல்புரிதலாகிய இவற்ருல் வளர்க்கப்பட்ட ஆசையே பாசபந்தத்தை வருவிக்கின்றது. இவற்றை நீருக்கி யழிக்கும்வழி எதுவெனில், என்றும் எக்காலத்தும் எவ்விடத்தும் எப்பொருளே யும் பிரமவ்டிவிற்கண்டு அப்பிரமத்தோ டைக்கி யப்படும் அவா தலேக் கொள்ளலேயாம். இவ்வா றவாத்தலேப்படின், ஆசைக ளகன்றுவிடும்.

317. காமியச் செயல்களின் நாட்டம் வீழப் புலன்வழிச் சேறலொழியும். அது ஒழிய, ஆசை யறும். ஆசையறுந்தவிடமே, வீடுபேருகும்; இதுவே முத்திநிலேயுமாம்.

318. பிரமத்தை மெய்யுணர்விற் கண்டின் புறும் அவா மிஞ்சியவிடத்து, அஞ்ஞானத்தாலாய பற்றுக்களெல்லா மறும். எதுபோலுமெனில், இளஞாயிற்றின் செஞ்சோதியின்முன், இருட் படலம் இரிதலேப் போலென்க.

319. ஞாயிறு தோன்றியவுடன் இருளும் அதன் துணேயாக நிகழும் குறும்புகளும் நீங்கி விடுவனவாம். அதுபோலப் பிரமத்தின் உண்மை யுணர்வாகிய ஆனந்த நிலேயை யடைந்தபின், பாசத்தொடக்கும் அதனேப்பற்றி வரும் துன்பங் களு மிலவாய்விடும்.

## மறதியின் நிந்தை

320. சொல்லும் பொருளுமாய பிரபஞ்சங் கள் அழிந்து போவ்னவென அறிந்து அவற்றை நீக்கி, ஆனந்த வடிவ்ாய பிரமத்திற் சித்தம் வைத்துப் பிராரத்துவ கன்ம வினேயின் புசிப் பிருக்கும்வரை காலத்தைக் கழிக்கக்கடவன்.



321. பிரமத்தினிடத்து வைத்த திடசித்தத் தினின்றும் மனம்விலகாது ஒருவன் அதிக சிரத்தை யோடிருக்க வேண்டும். மனம் அசிரத்தையுறின் மரணமுண்டாகுமென, முனிவரர் கூறியுள்ளார்.

322. ஒரு ஞானி, தன் சுத்தநிலேயினே அறியும் நாட்டத்தில், சிரத்தையுடனிருக்க வேண்டும். அப்படியிருக்காது விடின், மயக்கமும், அஞ்ஞான மும், பாசபந்தமும், அவற்ருல் துக்கமும் உண்டா கின்றன.

323. ஒரு ஞானி, புலன்வழியே மனத்தை யலேய விடுவானேயாகில், அவன் தீயகுணமாகிய மறதியினுற் றுயரடைவன். எவ்வாறெனில், தான் காதலித்த ஒரு பெண்ணின் நினேப்பால் எழும் உருவெளித் தோற்றங்களால் ஒருவன் எவ்வாறு துயருறுத்தப்படுவானே அதுபோலாமென்க.

324. குட்டத்திலே படர்ந்த பாசியைச் சிறிது போழ்து, விலக்கினும், பின் அது ஒருங்கு கூடி, நீரை மறைத்துக் கொள்வதுபோல, அஞ்ஞான மாய விருளும் பிரமத்தியான மில்லாதிருப்பவனே மூடிக் கொள்ளும்.

325. மனமானது தன் குறிக்கோளாகிய பிரமத்தினினேவினின்றுஞ் சற்றேனும் விலகுமேயா ளுல், அது கீழ்நோக்கிச் செல்லவே தொடங்கும். எவ்வாறெனில், கையிலிருந்த ஒரு பந்தானது மேன் மாடியின் ஏணிப்படியொன்றின் மேற் கைதவறி விழுந்தால் அது ஒவ்வொருபடியாகப் பாய்ந்து, பாய்ந்து எவ்வாறு கீழே விரைந்தோடு கின்றதோ, அதுபோலாமென்க.

326. மனமானது எப்புலன் வழிச் செல்கின்றதோ, அப்புலனின் குணங்களின் சார்பாகவே விளங்கும். அவ்விளக்கம் தடிப்பேற ஆசை உதிக்கும். உதித்தக்கால், ஒருவன் அவ்வாசைப் பொருள்களைப் பெற முயல்வன்.

327. சிரத்தைக் குறைவால் ஒருவன் தன் மெய்யியல்பை மறக்கிறான். மறந்தவன் கீழ் வீழ்ந்தவனாகின்றான். வீழ்ந்தவன் அழிந்தவனேயாவன். அவன் எழுந்து நன்னெறி படர்தலைக் காண்டலரிது.

328. நோயாளி வைத்தியன் உட்கொள்ள வேண்டாம் என்று கூறிய உண்டி வகைகளைத் தவிர்த்து நிற்பது போல, துன்பங்களுக்குத் தோற்றுவாயான புலன்வழிச் சேறலைச் சாதகன் நீக்கவேண்டும்.

329. விவேகம் கைகூடப்பெற்ற அறிவாளியொருவன் (பிரமஞானி) பிரமத்தியானத்திலிருந்து கணமேனும் தவறுவதைப் போல் பேரழிவு வேறில்லை. தியானத்திலே இடையீடின்றி மூழ்கியவன் இன்புறுகின்றான். ஆதலால் சதா தியானமே செய்யக் கடவாய்.

330. தேகத்தோடிருக்கும் போதும் தாமரையிலையிற்றண்ணீர் போலத் தான் வேறெனக்கண்ட தனி நிலையில் வாழ்பவன் தேகம் நீங்கிய பின்னும், தன் தனி நிலையிலேயே நிற்பன். பிரமத்திற்கும் தனக்கும் துவித பாவனை இருக்கக் கண்டவன் அச்சமுறுவன் என யசுர் வேதம் கூறாநிற்கும்.



331. சுருதி, யுத்தி அநுபவங்களினால் மித்தையெனக் காணப்பட்ட இப் பிரபஞ்சமும் தானும் அபேதமெனக் கண்டவன் மீளாத் துன்பக் கடலுள் மூழ்குகின்றான். களவெடுத்தானொருவன், கடுங் காவலிலிடப்பட்டுக் கலங்குவது போலாமென்க.

332. உண்மையான பிரமத்தியானத்தில் தன்னை நிறுத்தியவன் அஞ்ஞான வலிகுன்றியவனாய், நித்தியானந்த வாழ்வைப் பெறுகின்றான். ஆனால், உலகவியாபாரங்களில் அலைபவனே அழிந்து போகின்றான்.

333. பந்தத்திலாழ்த்து மிந்தப்படியினிற் பற்றை நீக்கிச் சிந்தையைப் பரத்திலாழ்த்திச் சித்தெனும் பொருளும் தானும் ஒன்றெனக் கண்டே யத்தோடுறைவனோர் துறவி. அவ்வாறுறைபவனுக்குச் சமாதிநிலை கைகூடும். அந்நிலை ஆனந்தத்தை யளிப்பதோடு அஞ்ஞானத்தால் வரும் துன்பங்களையும் அகற்றிவிடும்.

334. புறப்பொருட் பற்றினாலே பொருந்துபவை தீமையாகலின், விவேகத்தாலிதையறிந்து, புறப்பொருட்பற்றை நீக்கிப் பிரமத்தோடொன்றிய தியானத்தில் மூழ்கிக்கிடக்கக் கடவன்.

335. புறப்பொருள்களின் பற்றாயவழுக்குகள் நீங்க, மனம் தூய்மையடைந்து, சாந்தி பிறக்கும். அது பிரமதரிசனத்தைக் காட்டுகின்றது. பிரம தரிசனமாகிய பேரொளியைக் கண்டவனுக்குப் பிறப்பிறப்பாகிய பாசத்தளையறும். ஆதலின், புறப்பொருட் பற்றறுத்தலே வீடுபேற்றின் முதற் படியாம்.

336. கற்றவனாய், விவேகமுடையவனாய், வேதநூல் வல்லவனாய், ஆத்மதெரிசன நாட்டமுடையவனாய், வீடுபேற்றை விழைந்தவனாயுள்ளான் ஒருவன், தன்னைத்துன்பக்குழியில் வீழ்த்தும் புறப் பொருள்களில் பற்றுவைப்பானா?

337. உலகப்பற்றுள்ளவன் வீடுபேறெய்த மாட்டான். வீடுபேற்றைப் பெற்றவன் தேகாபிமானமற்றவனாகின்றான். நித்திரை செய்பவன் விழித்திருப்பவனுமல்லன்; விழித்திருப்பவன் நித்திரை செய்பவனுமல்லனன்றோ?

## நிட்டை கூடும் முறை

338. தாவர சங்கமமென்னுமிருவகைப் பிரபஞ்சங்களிலும் பிரமத்தையே கண்டு அப்பிரமமே எப்பொருளுக்கும் மூல காரணமென்பதை மெய்யறிவால் உணர்ந்து, நிற்பதே சாயுச்சிய பதவியாகிய இரண்டறக் கலத்தலாம்.

339. உலகத்தை ஆக்கியழிக்கும் முதல்வனும் தானும் ஒன்றெனக் கண்டவனே பாசத்தொடர் பறுத்தவன். இப்பிரபஞ்சம் முழுவதும் தானே யெனக் காண்டலே மேலான உண்மை நிலை. இந்த நிலை, புறப்பொருட் பற்றற்று, அகத்தே பிரமத்தியானத்தில் மூழ்கியவனுக்கே கைகூடும்.

340. தேகப்பற்றுடையவனாய், மனத்தைப் புலன் வழிச் செலவிடுத்து, அவை விரும்பியாங்குத் தொழில்களை யுஞற்றிவருபவனுக்குப், புறப் பொருட் பற்றறுமாறெங்ஙனம்? வருணாச்சிரம தருமங்களையும் காமியச் செயல்களையும் புறப்பொருட் பற்றுக்களையும் நீக்கி ஆராக் காதலுடன் அகத்தே பிரமத்தைக் காதலிப்பவனுக்கே இது கைகூடுமென்க.



341. சற்குருவினிடம் தான் கற்கவேண்டியனவற்றை முறைப்படி கற்ற ஒரு சன்னியாசிக்கு உலகமும் தானும் ஒப்பக் காணும் நிலையாகிய சமாதிநிலையே உரித்தென வேதநூல் கூறும்.

342. ஆணவம் தடிப்பேறியக்கால், அறிவாளிக்கும் அதன் வலியையடக்கல் எளிதன்று. எனினும், உலகை நீத்து உண்மைப் பொருளாம் பிரமத்தின் தெரிசனம் ஒன்றுமே பற்றுக்கோடாய்ப் பற்றிய பெரியோருக்குமட்டும் இஃது எளிதாகும். ஆசையே பிறப்பிறப்பிற் கேதுவாகும்.

343. மாயையின் முனைப்புச் சக்தியானது திரோதான சக்தியுடன் கூடி "யான் செய்தேன்" "என்னுடையது" என்ற அகங்காரமாகிய மோகினியின் மயக்கிற்றள்ள, அவள் மோகவலைப்பட்டானொருவன் அவள்வழிச் சென்றலைகின்றான்.

344. ஆவரண (மறைப்பு) சத்தி வேரோடு களையப்பட்டாலன்றி விக்ஷேப (வெளியே செலுத்தும்) சத்தியை வெல்லுதலரிது. காண்பானாகிய தன்னைக் காணப்படும் பொருள்களினின்றும் முற்றாக வேறெனக்காண்பதனால் மாத்திரமே ஆன்மாவை மூடியிருப்பதாகிய இருள் நீங்கும். நிலையற்ற புறப்பொருள்களினால் மனஞ் சலனமடையாது இருத்தலே பூரண வெற்றியாகும்.

345. கேட்டல் சிந்தித்தல் தெளிதலாகிய வற்ருல் வந்த அனுபவஞானம் வாய்ந்தவன் அகப்பொருள் புறப்பொருள் என்பனவற்றின் மெய்யியல்புகளை அறிவான். அறிந்து மாயையாம் மோகினியின் மயக்கை வெல்வன். அவ்வாறு வென்றபின், அவன் பிறப்பிறப் பெனுந்துயர்ப் படான்.

346. பிரமமுஞ் சீவனும் ஒன்றெனத் தெளிந்த அநுபூதியெனும் அக்கினியானது அடர்ந்த அஞ்ஞானமாகிய அடவியை அழிக்கின்றது. தேய்ந்து தேய்ந்து ஒன்ருகுந் தெளிநிலை கண்டபின், மீட்டும் பிறவிக் கேதுவாய மாயையின் குணங்களும் உண்டுகொல்!

347. உள்ளேயிருக்கும் உண்மையைக் கண்டவிடத்து அதனை மறைத்திருந்த மறைப்பு நீங்கும். நீங்க, மயக்கவுணர்ச்சி இல்லாதொழியும். ஒழிய, அப்பிறழ்வுணர்ச்சியால் இது காறும் இவனைப்பற்றி வந்த இன்னல்களும் விடைகொள்வனவாம்.

## அடிப்படைப் பொருள் விளக்கம்

348. திரைமறைப்பும், அஞ்ஞானமும், இன்னலாம் பிறப்புக்களும் கேவலம், கயிற்றைப்பாம் பென மருண்ட மருட்சியில் காணப்படுகின்றன. அம்மருட்சி நீங்கியவழிப் பாம்பில்லையாக, அஃதில் வழிப் பயமுமில்லா தொழியுமன்ருே? ஆகையால் பந்தத்தளையறுக்கும் பக்குவன் பார்க்கும் பொருள்களின் மெய்ப்பண்பைப் பகுத்தறிய வேண்டும்.



349. 350. இயல்பாகவே ஒளிப்பிரபையில்லாத இரும்பு அக்கினியினிடப்பட்ட பின் கொழுங் கனற் பொறிகளுடன் பிரகாசிக்கின்றது. அவ்வாறே புத்தியும் தன்னேடுடனுறையும் பிரமத்தின் சமவாய சம்பந்தத்தினுல் தானே காண்பானும் காட்சிப் பொருள்களுமென விளங்குகின்றது. இக்காண்பான் காண்பொருளாய இருவகைப் பொருள்களும் மயக்கம் கனவு சங்கற்பம் ஆதியன பொருந்திய காலத்து, பொய்ப் பொருள்களாகக் காணப்படுகின்றன. ஆதலின் மாயையும் அதன் வியாபாரங்களாகிய தேகமாதிப் பொருள்களும் இல்பொருள்களே. அவை கணந்தோறும் மாறியழிதலின் பொய்ப் பொருள்களாகின்றன. பிரமமோ என்றும் ஒரே படித்தானது.

351. பரமாத்மாவோ நித்தியமாய் அபின்ன சத்தியுடையதாய், ஒப்பாரில்லாததாய், புத்தியின் செயல்களுக்குச் சாட்சியாய், சூக்கும தூல தேகங்களின் வேருய், நான் எனும் பதத்தின் உட்பொருளாய் அழியாவானந்தமாயிருக்கும்.

352. ஞானி ஒருவன் சடசித்துப் பொருள்களின் இயல்புகளை உணர்ந்து ஞானக்கண்ணுல் உண்மையை நாடி அறிவொளியான தன்னையும் பிரமத்தையும் ஒன்றெனக்கண்டு தன்னை மறைத்து நிற்கும் மயக்கம் திரையாதித் தடைகளை வெட்டிச் சாந்தி நிலையைப் பெற்றின்புறுவன்.

## சமாதி விளக்கம்

353. நிர்விகற்ப சமாதிப் பிரமமும் தானும் ஒன்றெனக் கண்டு திளைத்தவன் பிறப்பிறப்பாகிய சிகையை அறுத்தவனுவான்.

354. நான் நீ என்ற சுட்டுப்பிரபஞ்சங்கள் எல்லாம் புத்தியின் மயக்கால் விளைகின்றன. ஆனல் சமாதியிலே பிரம சைதன்னியத்திலே இந்தக் கற்பனைகள் எல்லாம் கழன்று விடுகின்றன.

355. புலனைவென்று சாந்தனுய் உலகை நீத்து மனவலிபெற்றுச் சதா சமாதியின்கண் ணிருக்குஞ் சந்நியாசியானவனே "தானேயிவ் வுலகம்" எனக்காண்கிறுன். அஞ்ஞானத்தால் விளையும் கற்பனைகளைக் கடந்து, தனக்கோர் செயலின்றி மனச்சலனமின்றிய வைராக்கியம் பூண்டு ஆனந்தத்திற் றிளைப்பவனு மவனே.

356. சமாதிநிலையைப் பெற்று இவ்வுலகத் தையும் அதன் புறப்பொருள்களையும் மனத்தையும் தானெனு மபிமானத்தையும் பிரமமாகிய தன்னு ளடக்கியவர்தாம் பிறப்பிறப்புத் தொடர்பறுத் தவர்களாவார்கள். இது வன்றி வாய்ஞானம் பேசுபவர்க் கிது கிட்டலரிது.

357. உபாதிகளின் வெவ்வேருன தன்மை களுக்கேற்ப மனிதன் தன்னையும் வேறுபடுத்திக் காண்கிறுன். இவ்வேறுபாடுகள் ஒழியத் தன் மெய்யியல்பைக் காண்கிறுன். இவ்வுபாதியை யொழித்தற்கு நிர்விகற்ப சமாதியே சிறந்த சாதனமென்க.



358. பிரமரந்திரம் என்னும் வேட்டுவன் எடுத்த மென்புழு எவ்வாறு அவ்வேட்டைவாளி யின் ரீங்கார ஓசையால் தன்னியல் கெட்டு அதன் உருவாய்விடுகின்றதோ அதுபோலச் சித்தாகிய பிரமத்தியானத்தில் மூழ்கியவன் பிரமமாகின்றுன்.

359. வேறு நினைப்பின்றிச் செயலின்றி அந் தப் புழுவானது எவ்வாறு வேட்டுவனையும் அதன் பிரமரந்திர மந்திர ஒலியையுமே தியானஞ்செய்து அதன் உருப்பெறுகின்றதோ அவ்வாறே யோகி யும் ஏகாக்கிர சிந்தையுடனும் திடபத்தியுடனும் பிரமத்தையே தியானித்து அப் பிரமமாகின்றுன்.

360. பிரமத்தின் மெய்யியல்போ நுண்ணிதின் நுண்ணியது. அது புறப்பொருட் பற்றுள்ள மனத் தாலறியப்படாதது. பின் மனத் தூய்மையடைந்து சமாதிநிலை கைகூடிய ஒருவனுக்கே அதனியல்பு விளங்கும்.

361. எவ்வாறு புடத்திலிட்டுச் சுடச்சுடச் செம்பொன் சுத்தமடைந் தொளிகாலுகின்றதோ அவ்வாறே மனமும் இடைவிடாத் தியானமாகிய சிவோகம் பாவனையால் முக்குணக் களிம்பும் நீங்கி முதல்வனேடொன்ருய் மன்னித் திகழும்.

362. இடைவிடாத் தியானத்தாற் றூய்மை யடைந்த மனம் பிரமசோதியுள் மூழ்கச் சவிகற்ப சமாதி நிலையினின்றும் நிர்விகற்ப நிலையை யெய்தும். எய்திப் பிரம ஞானத்துட் டிளைக் கின்றது.

363. இந்தச்சமாதியால் பாவச் சிகைகள் பயனற்றறுந்துவிடப் பின் தன் செயலற்று உள்ளும் புறம்பும் எங்கும் சிவமயமேயாய் விளங்குகின்முன்.

364. ஞான நூல்களைக் கேட்டலினுஞ் சிந்தித்தல் நூறுமடங்கதிகம். சிந்தித்தலினும் நிட்டை கூடித் தெளிதல் நூருயிரமடங்கதிகம். ஆனல் நிர்விகற்ப சமாதி நிலையோ ஒப்புக்கூறுந் தகைத்த தொன்றின்றித் தானே தனக்கொப்பாய தூயநிலையாம்.

365. நிர்விகற்ப சமாதிநிலையின் கண்ணே தான் பிரமத்தின் உண்மைத் தரிசனம் பெறலாம். ஏனைய அவசரங்களில் மனம் சார்ந்ததன் வண்ணமாயிருத்தலின் ஏனைக்காட்சிகளாற் சலனப்பட்டிருக்கும்.

366. ஆகையால் சாந்தமான மனதுடனும் ஐம்புலவடக்கத்துடனு மிருந்து தன்னகத்தே விளங்கும் பிரமத்தியானத்திலே மனத்தை மூழ்கச் செய்து அத்தியானத்தின் பயனாக வரும் பிரம சைதன்னிய ஒளியில் தானும் பிரமமும் வேறல்ல வெனக் கண்டு அனாதி தொட்டுடன் பிறப்பாய் வந்த ஆணவாதி மயக்கத்தை அழித்துவிடு.

367. யோகப் பயிற்சிக்குரிய சாதனங்கள் மௌனமும் விருப்பின்மையும், தனக்கெனச் செயலொன்றின்மையும், ஏகாந்தவாசமுமேயாம்.

368. ஓசையடங்கிய தனியிடத் துறையினைம்புலனடங்கும். புலனடங்க மனமடங்கும். மனமடங்கியவழி நான் எனது எனுஞ் செருக்கடங்கும். செருக்கடங்கிய ஞான்று யோகி பிரமத்தோடைக்கியப்பட் டின்பிற் றிளைப்பான். ஆதலின், தியானத்திற்கு மனவடக்கமே மிகச் சிறந்தது.



369. வாக்கை மனதி லொடுக்கி மனதைப் புத்தியிலொடுக்கிப் புத்தியைச் சீவான்மாவி லொடுக்கி அச்சீவான்மாவைப் பிரமத்திலொடுக்கிப் பின்வரும் சாந்தியிற் றிளைப்பாயாக.

370. தேகமோ பிராணவாயுக்களோ இந்திரியங்களோ புத்தியோ மற்றந் தக்கரணங்களோ இவற்றுள் யாதினேடு மனம் சார்ந்ததோ அச்சார் பொருளினியல்புகளையே பற்றுமாறு மனமானது ஒருவனைத் தூண்டிவிடுகின்றது. அவ்வாறு சார்ந்த தன் வண்ணமாகின்முன்.

371. இவ்வாறு மனதை இப் பொருட்சார் பிற் படியவிடாது தடுப்பானயின், யோகி எப் பொருளின் பற்றுமற்றவனாய் அவற்றின் வேருய் என்றுமழியாப் பேரின்பத்திற்றிளைப்பன்.

## வைராக்கிய விளக்கம்

372. வைராக்கியம் பிறந்த ஒருவனே இவ்வாறு உள்ளும் புறமும் துறவடையக் கூடிய பக்குவனுவான்.

373. இந்த வைராக்கியம் பிறந்த ஒருவனே சதா பிரமத்தோ டைக்கியப் பட்ட தன்மையினல் இந்திரியங்களின் புறச் சேட்டைகளையும் மனதின் உட்சேட்டைகளையுந் துறந்தவனுகின்முன்.

374. ஓ ஞானியே! வைராக்கியமும் பகுத்தறிவாய விவேகமும் ஒரு மனிதனுக்கு ஒரு பறவையினிருசிறகர்கள் போலாகின்றன. இவ்விரு சிறகர்களுமின்றி ஒன்றின் உதவிமாத்திரங் கொண்டு கோபுரத்துச்சியிற் படர்ந்து சென்று நறைவீழ்த்து நறுமணங் கமழும் இன்பவல்லியாகிய முத்திக் கொடியைச் சேர்த லரிது.

375. தீவிர வைராக்கிய நிலையடைந்தவனே சமாதி நிலைக்குரியவனுகின்றான். சமாதி நிலை பெற்றவன் அனுபூதிமானுகின்றான். அவ்வனுபூதி ஞானம் பெற்றவன் பாசத்தளையை யறுக்கின்றான். அவ்வாறு பாசத்தளையை யறுத்த அமலனே பேரின்பத்தை நுகர்கின்றான்.

376. மனவடக்க முள்ளவனுக்கு வைராக்கியத்தைப் போல இன்பத்தை யூட்ட வல்ல வேறு பொருள்களொன்றுமில்லை. இந்த வைராக்கியத்தோடு சிவானுபூதியுங் கைவரப் பெற்றால், அவை அவையுடையோனை யோரொப்புயர்வற்ற தனிப் பெருவாழ்வின்கட் செலுத்துகின்றன. இந்த வாழ்வே பேரின்பவல்லியாகிய சிற்றிளம்பெண்ணை மறைந்தின்புறச் செய்யும் ஏதுவாகலின் உள்ளும் புறம்பும் வைராக்கியத் துறவுபூண்டு சதா பிரமத் தியான முடையவனுயிரு.

377. புறப்பொருள்களின் பற்றை நஞ்செனவெறுத்தொழி. சாதி சமயம் ஆச்சிரமம் என்னும் பண்பில் பொருள்களின் பற்றை நீக்கு; காமியச் செயல்களை ஒழி; தேகாபிமானம் முதலியவற்றை



நீக்கு. பிரமத்தினிடம் நாட்டம் வை; அப்போது நீயே அந்தப் பிரமமாகின்றாய்.

## தியான விதி

378. பிரமத்தினிடத்தே யூன்றிய சிந்தையனாய் இந்திரியங்களையெல்லாம் தத்தம் இடத்தை விட்டகலாவண்ணம் நிறுத்தி வேறு சிந்தனையின்றிப் பிரமமும் நீயு மொன்றெனத்தேறி அப் பிரமத்தி னின்பத் தேறலை யிடையறாது மாந்தியிரு. சாரமின்றிய சக்கையைப் போன்ற ஏனைப்பொருள்களாலாம் பயனென்ன?

379. துக்க சாகரத்துள் வீழ்த்துவனவாகியு சடப்பொருள்களிற் பற்று வையாது வீடுபேறாய பேரின்பத்தைத் தரவல்ல பிரமத்தினிடம் நாட்டம் வை.

380. தோன்றாத் துணையா யுடனிருந்து, எல்லாங் காண்பதும், புத்திதத் துவத்திலே நின்று மற்றைப் பொருள்களை விளக்கியும் தான் அதற்கும் மேற்பட்டதாய் உள்ளதுமான பிரமத்தை உன்பரமார்த்தனாக எண்ணி அதுவும் நீயும் ஒன்றேயெனச் சிவோகத்திரு.

381. பிறவிடயங்களிலே மனதை அலைய விடாது இந்தப் பிரமத்தின் பாலிடையறாது தியானம் செய்பவன் "அதுவே தான்" ஆகின்றான்.

382. உடைந்த மட்பாண்டத்தி லொருபற்று மின்றிய தன்மை போலத் தேகாபிமானம்

முதலியவற்றின் பற்றை நீக்கி, பிரமத் தியானத்திலே திடசித்த முடையவனுயிரு.

## ஆன்ம தரிசனம்

383. சித்த சுத்தியடைந்த மனதைப் பிரமத்தியானத்திலே மூழ்கச் செய்து அங்கே மனதைச் சும்மாவிருக்க வைத்து உன் அகண்ட பரிபூரண நிலையை உற்றுநோக்கு.

384. அங்கே தேகம் இந்திரியம் பிராணவாயு மனம் அகங்காரம் ஆதிக் கண்டப்பொருள்களின் சார்பின்றி அகண்டிதமாய் அபின்னசத்தியுடைய தாய் ஆகாயம்போற் பரந்து விளங்கும் பிரமத்தைக் காண்பாய்.

385. குடம் சாடி பெட்டகம் முதலியவற்று ளடங்கிய வெளியும் ஆகாய வெளியு மொன்ரு மாறு போல அகங்காரம் முதலிய மாசுகள் நீங்கிய வழிச் சுத்தப் பிரமமும் நீயும் ஒன்றேகாண்.

386. பிரமன் முதலாகப் புல்லீருகவுள்ள பொருட்டன்மைகளெல்லாம் பொய்யானவே யாம். ஆதலின் ஒருவன் தன்னைத் தன்னிடத்து விளங்கும் பிரமத்தோடொன்ருய்க் காணல் வேண்டும்.

387. மயக்கத்தால் "இது அப்பொருள் அல்ல என எண்ணப்பட்ட பொருளைத் தானே விவேகம் உதித்தஞான்று இது அப்பொருள் தான்" எனக் காண்கிருேம். எவ்வாறு மயக்கத்தால் கயிற்றைப் பாம்பாக எண்ணிப் பின் மயக்கந் தெளிந்தவழி



அக்கயிறு பாம்பல்ல வெனத் தெளிகின்ருேமோ அவ்வாறே உலகமும் மயக்கந் தெளிந்த நிலையிற் காணுங்கால் பிரம சொரூபமாக விளங்கும்.

388. பிரமமே பிரமன். அவனே விட்டுணு. அவனே இந்திரன். அவனே சிவன். அவனே உலகம். அவனையின்றி யிங்கொன்றுமில்லை.

389. அவனே உள்ளுமாய்ப் புறம்புமாகி யுரைக்கொணுப் பழைமை பூண்டும் பின்னுமோர் புதியனுகி மேலொடு கீழாயுள்ளான்.

390. திரையும் நுரையும், திகழ் குமிழும் பெருஞ்சுழியும் உரைக்கிற் றண்ணீரே யாதல் போல, சித்துப் பொருளு மெல்லாமாயிருக் கின்றது.

391. வாக்கு மனதிற்கெட்டிய உலக மெல்லாம் அவன்மயமே. அவனின்றி யாதுமில்லை. அவன் அசுத்தமாயையுட்பட்ட பிரகிருதிப் புவனத் திற்கு மப்பாற் பட்டவன். மண்ணலாக்கப்பட்ட சட்டி குடம் முதலியன மண்ணின் வேருய வையோ? இல்லை. மாயையின் மயக்காம் மதுவினை யுண்டோனே "நான்" "நீ" என்ற தன்மை முன்னிலையிற் கூறுகின்ருன்.

392. காண்பான் காண்பொருள் காட்சி என்ற பேதங்களின்றிக் காணப்படுவ தன்ருய் கேட்கப்படுவதன்ருய் அறியப்படுவதன்ருய் அகண்டிதமாயுள்ளதுவே பிரமம் என வேதங்கள் முழங்குகின்றன.

393. பிரமம் ஆகாயவெளிபோல் களங்க மற்றதாய் அகண்டிதமாய், சலனமற்றதாய், விகார வேறுபாடில்லாததாய், அகம் புறம் என்பதின்றி எங்குமுள்ளதாயிருக்கின்றது.

394. பன்னிப் பன்னிப் பல கூறியென்? சீவனும் பிரமமுமொன்றே. இப்பிரபஞ்சமும் பிரமமயமே. சுருதிகளும் பிரம மொன்றேயுள்ள தென வலியுறுத்துகின்றன. தாமும் பிரமமுமொன்றெனக் கண்டு சடமாகிய பிரபஞ்சத் தொடர்பை நீக்கி நித்தியானந்த வாழ்விற்றிளைக்கும் மெய்ஞ்ஞானிகளும் இவ்வுண்மையைக் கரதலாமலக மெனக் காட்டியுள்ளார்கள்.

395. முடை நாற்றத் துருத்தியாகிய கவசத்தை முன்னரே வெட்டிப் பின் சூக்கும கவசமான தேகத்தையும் பிளந்து உட்சென்றால் நீயும் பிரமமும் ஒன்றெனச் சுருதிகள், கூறும் பிரமத்தைக் காண்பாய். கண்டு அதனோடே பேதமின்றி வாழ்வாயாக.

396. பிணம்போன்ற தேகத்தினபிமானம் கொண்டுள்ளவரை மனிதன் மலமுடையவனுய்ப் புலப்பகையிற்றுக்குண்டு பிணி மூப்புச் சாக்காடாதி யவத்தைகளுட் படுவன். எப்போது தேகாபிமானம் விட்டுத் தான் மலரகிதன் எனவும் சேதனன் எனவும் நினைக்கின்றானோ அன்றே யவனவ்வாறாகிவிடுகின்றான்.

## நிர் விசேஷத்திற் பேதமெங்ஙனம்?

397. மனோ சங்கற்பத்தால் சீவனைப்பற்றியதாகக் கொண்ட எவ்வகையபிமானங்களும் நீங்கியவுடன் தனிப்பரம் பொருளாகிய பிரமம் தன்னியல்பான பிரபையுடன் விளங்கும்.



398. பிரமத்தியானமாகிய நிர்விகற்ப சமாதியிலே மனதை மூழ்கச் செய்தால் பின் நாம ரூபங்களுடன் தோன்றும் இப்பிரபஞ்சம், பொய்யாய்க் கனவாய்ப் பழங்கதையாய் மெல்லப் போய்விடும்.

399. ஒன்றேயான பிரமத்தினின்றும் அதனின்வேறாய பிரபஞ்சம் ஒன்று தோற்றிய தென்பதெல்லாம் மனோரத மாத்திரையேயாம்.

400. காண்பான் காண்பொருள் காட்சி என்ற பகுப்புகளையும் கடந்து நிற்பதும் நாம ரூபமற்றதுமான ஒரு பொருளினின்று எவ்வாறு விகாரத் தோற்றங்களுண்டாகும்?

401. பேரூழியின் பின் ஓங்கி நிறைந்து சலன மற்று நிற்கும் கடல் போல விளங்கும் பிரமத்தினின்று விகாரப் பொருள்கள் எவ்வாறுதிப்பன?

402. விளக்கொளியின் முன் இருள் தன் வலியடங்குவது போல மயக்கத்தை விளைக்கும் மாயையின் வலி பிரமத்தினுள்ளடங்கிய பின் வேற்றுமை எவ்வாறு தோன்றும்?

403. ஒன்றாயுடனுறைவதாயுள்ள பிரமத்தினின்றும் வேறாகப் பொருள்கள் உள என்ற எண்ணம் எவ்வாறுதிக்கும்? ஆழ்ந்த நித்திரையில் ஒருவன் அனுபவிக்கும் இன்பத்தினின்றும்

வேருகப் பிறிதொன்று மிருந்த தென்பதனை யார் கண்டு சொல்வர்?

404. மேலான உண்மை நிலையை ஒருவன் அடைவதற்கு முன்னும் இந்தப் பிரபஞ்சம் சித்தினிடத்துள்ளதல்ல என்பதை அறியக் கடவன். இறந்தகால நிகழ்கால வருங்காலமாகிய முக்காலங்களிலும் கயிற்றின்கட் பாம்பைக் கண்டாரில்லை. அன்றிக் கானலில் நீர் தோன்றியதுமில்லையன்ருே?

405. சித்து அசித்து என்ற இரண்டு கூற்றுப் பிரபஞ்சமும் உண்மையில் ஓர் மயக்கக் காட்சியேயென நூல்கள் கூறுகின்றன. சுழுத்தி அவத்தையில் இதன் உண்மையை அனுபவ வாயிலாகக் கண்டிருக்கின்ருர்கள் பெரியோர்கள்.

406. ஒன்று வேறென்ருகத் தோற்றும் அத்தோற்றப்பொருளும் அது தோன்றுதற்கிடமாயுள்ள மூலகாரணப் பொருளும் ஒன்றேயென ஞானிகள் கண்டனர். அது பழுதையும் பாம்பும் போலென்க. பழுதை பாம்பாகத் தோற்றல் மயக்கம் உள்ளவரையே.

## ஆத்ம சிந்தனைக்கு வழி

407. இப் பிரபஞ்சமும் மனேதத்துவம் உள்ளவ்ரையுமேயாம். மனம் அழிந்தவிடத்து இதுவும் அழிகின்றது. ஆதலின், உண்மைப் பொருளாகிய பிரமத் தியானத்திலேயே மனதை அழுந்தச் செய்.



408. ஞானி ஏகனுய் அனுவாய் ஈடேற்ற மற்றவனுய் (ஈடு=ஒப்பு, ஏற்றம்=உயர்வு) சச்சிதானந்த சொரூபியாய், வாக்காலும் மனத்தாலும் கூறவும் எண்ணவும் முடியாதவனுய், ஒரு பெரும் பரம்பொருளைத் தன் இருதய கமலத்தின்கண்ணே நிறுவி, சமாதிநிலை பூண்டு அப்பொருளோ டின்புறுகின்ருன்.

409. காரண காரியமற்றதாய், கற்பனை கடந்த சோதியாய், ஒரே தன்மைத்தாய், ஒப்பற்றதாய், அளவைகளுக் கெட்டாததாய், வேதங்களினுட்பொருளாய், "அகம் அகம்" என்று அனைத்துயிரினிடத்திருந்தும் விளங்குவ்தாயுள்ள அகண்ட பரிபூரண சச்சிதானந்த பிரமத்தைத் தன்னிருதய குகையின்கண், ஞானி சமாதியிற் காண்கின்ருன்.

410. ஏகமாய், உபசாந்தமாய், என்றுமுள்ளதாய், குணங்குறியற்றதாய், நாமரூபங்கட்கதீதமாய், திரையிலாக் கடல்போலச் சலனமற்றதாய், நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமலமாகி என்று மழியாப் பொருளாய் விளங்கும் பிரமத்தை ஞானி சமாதியிற் காண்கின்ருன்

411. மனதைச் சமாதியில் நிறுத்திப் பிரமத்தை உன்னுள்ளே தரிசித்தும் பல பிறவிகடோறு மீட்டிய பாசத்தளைகளை வெட்டி, அருமையாகப் பெற்ற மானுட தேகத்தாலாம் பயனை இப்பிறவியிலேயே பெறுவாயாக.

412. உன்னோடுடனுறைபவனுகிய பிரமத்தையே சதா தியானஞ் செய். அவ்வாறு செய்வா

யேயானால் இனிமேல் பிறப்பிறப்பாகிய வட்டத்திற் படமாட்டாய்.

### காணும் உலகைப் புறக்கணித்தல்

413. சவமெனத் தேகத்தை அருவருத்தொதுக்கிய ஞானி பின் அதன் மீது பற்று வைக்கமாட்டான். ஆனால், முற்செய்த பிராரத்துவ வினையின் பயனாக அவன் தேகத்தோடு வாழ்ந்து வருங்காலத்து அஃது அவனுக்குத் தோற்றினால், அஃது ஓர் தோற்ற மாத்திரையேயன்றி வேறு பயன் தரவல்லதல்ல.

414. பிரம தெரிசனத்தால் அத்தோடின்புற்றபின், சடப்பொருளாய் ஊத்தைப் பாண்டமாயுள்ள தேகாபிமானத்தை யொழி. வாயினின்றும் வாந்தி செய்யப்பட்டதொன்றை ஒருவன் நினைத்த காலத்தும் அவனுக்கு அருவருப்பை அது கொடுக்கின்றதன்றோ? அதே போலத் தேகத்தையும் அருவருத்துத் தள்ளிவிடு.

415. பிரம ஞானக்கினியிலே இச்சடப் பொருள்களை அவற்றின் மூலத்தோடு தகித்து, நீயே ஏகனாய்ச் சச்சிதானந்தனாய பரம்பொருளெனக் கண்டின்புற்றிரு.

416. இவ்வாறு உண்மை நிலையை அடைந்தவனுக்குப் பிராரத்துவ வினையாகிய நூலாலாக்கப்பட்ட ஆடைபோன்ற இத்தேகம் இருந்தாலென்? விழுந்தாலென்? அவன் பிரமத் தியானத்திலாழ்ந்திருத்தலால், புறப்பொருள்களின் பற்றவனுக்கில்லை. அது மாட்டின் கழுத்திற் போடப்பட்ட மாலை போன்று ஒரு பயனுமின்றிக் கிடக்கும்.



417. தானும் பிரமமும் ஒன்றெனக் கண்டு இன்புற்றபின் ஞானிக்கு இத்தேகத்தாலாம் பயன் என்ன?

### ஆன்ம ஞானத்தின் பயன்

418. ஆசெலாம் நீக்கி ஆனந்த நிலையடைந்தவன் உள்ளும் புறமும் எங்கும் ஆனந்த மயமாயிருக்கின்றான்.

419. வைராக்கியம் அறிவைத்தர, அறிவு ஐம்புல வடக்கத்தை விளைவிக்க, அவ்வடக்கம் அமரரும் காணா வமலனின்பத்தில் மூழ்குவிக்க, அவ்வின்பிற்றிளைத்துச் சாந்தியடைகின்றான்.

420. பின்னாலடையும் பேறுகளுண்டோவென ஆசங்கை கூறின், முன்தான் செய்துவந்த சோபான' முறைகளில் யாதும் பிரயோசனமின்றாய் முடியுமன்றோ? சோபான முறைப்படி எல்லாம் ஒழுங்காகவரின் இன்பநிலை யெய்துவது மியல்பே.

421. ஞானத்தை விழைபவன் இவ்வுலகத்தில் வரும் இன்னல்களால் நலியாதிருக்க வேண்டும். மயங்கியபோது மறச்செயல்களைப் புரிந்தவன் தெளிந்த பின்னும் அச்செயல்களைச் செய்வானோ?

422. அறிவா லெய்தக்கூடிய பயன் உண்மையைப் பற்றிக்கோடலேயாம். சடப்பொருள்களில் பற்று வைத்தல் அறியாமையின் பயனும். இது கானலைக் கண்டா ரிருவரிடத்துக் காணலாம். கானலே யிது நீரல்ல வெனக் கண்டவன் இந்த வெளிமயக்கைக் கண்டு நகைத்துத் தன் வழிச் செல்வன். மற்று அஃதோர் நன்னீர்த் தடாகமென எண்ணிச் செல்பவன் அந்தோ யாதும் பெருது வாடியிருப்பன். ஞானிக்கு உலகத்தோடு தானிருப்பதாகத் தோன்றினும், தான் ஓடும் பழமும் போற் பற்றற்று நிற்பன். உலகப் பற்றுள்ளவனே உலகமயக்கிலும் அதன் சிமிட்டிலும் சிக்கி அலமந்து பேரிடருழப்பன். அல்லாக்கால், பிரமஞானம் பெற்றவனுக்கும் அஃதில்லாதவனுக்குமிடையே உள்ள பிரத்தியட்சப்பேற்றின் வேற்றுமைதான் யாதோ?

423. ஒருவனின் சித்தப்பிரமை நீங்கிய விடத்து அவன் புலன்வழிச் சென்று காமியச் செயல்களைப் புரிவதற்குக் காரணமான பிறிதொன்றில்லை யன்றோ?

424. புறப்பொருள்களின் ஆசை என்று அறுந்ததோ, அன்றே வைராக்கிய ஞானம் பூரணமடைந்தது. அந்த ஞானமும் "நான்" "நீ" என்ற அபிமானங்கள் அற்ற விடத்தே யுதிக்கும். பிரமத்தியானத்திலாழ்ந்த மனமானது, அத்தியானத்திலேயே ஆழ்ந்து கிடந்து பின் மீளாது எப்போது தன் செயலற்றதோ அப்பொழுதே ஐம்புல வடக்கமும் வாய்த்ததென அறியலாம்.



## சீவன் முத்தனின் இலக்கணம்

425. புறப்பொருள்களின் பற்றை நீக்கி உலகத்தையும் அதன் தோற்றங்களையும் ஓர் பாலன் எவ்வாறு விருப்பு வெறுப்பின்றிப் பார்ப்பானே அவ்வாறே நோக்கி, தான் உலகத்தோடிருப்பினும் தன் சித்தத்தைப் பிரமத்தினிடத்தே ஒன்றச்செய்து எவன் இன்பம் அனுபவிக்கின்றானே அவனே ஞானி.

426. அவ்வாருன ஞானி அறிவுவிளக்கம் பெற்றவனாய்ப் பிரமத்திலே தன்னை மூழ்குவித்து முக்குணவயப்படாது நித்தியானந்தத்தை அனுபவித்திருப்பன்.

427. பிரமமும் தானும் ஒன்றெனக் கொண்டு துவித பாவனையற்றுச் சோதிப்பிழம்பினுள் தன்னை மூழ்குவித்து நிற்கும் நிலையே தடையில்லா ஞானமாகிய அறிவு விளக்கம் எனப்படும்.

428. அவ்வாறு பேரறிவின் மூழ்கி இக்காரியப் பிரபஞ்சத்தை மறந்து நித்தியானந்த நிலையிலிருப்பவனே சீவன்முத்தனுகின்றான்.

429. பிரமத்தியானத்திலே மூழ்கியவன் உலகத்தோடொன்றியிருப்பினும், நீர்க்குடமேந்தி விளையாடிவரும் தாதியைப்போல உலகத்திலே தோயாதவனய்ச் சீவன்முத்தனுகின்றான்.

430. உலகில் பிறவி எடுத்ததினுலாய பயனைப் பெற்றேனே, பெறுவேனே எவ்வாறு

பெறுவேனென்ற எண்ணங்களற்று அவாவறுத்து எவன் விளங்குகின்றானோ அவனே சீவன்முத்தனாவான்.

431. இத் தூலதேகத்துடனிருக்கும்போதே என்னுடம்பு நான் எனது என்ற அபிமானமற்றவனே சீவன்முத்தன்.

432. கழிந்தனவற்றைக் கருதாது இனிமேல் வருவனவற்றிற் கேங்காது இப்போது நடப்பனவற்றை விருப்பு வெறுப்பின்றிக் கண்டு எவன் விளங்குகின்றானோ அவனே சீவன்முத்தன்.

433. ஒன்றோடொன் றொவ்வாத வியல்புகளையுடைய இன்ப துன்பங்கள் நிறைந்ததாகிய இவ்வுலகத்தை ஒரே நிலையில், ஓடும் பொன்னும் ஒப்ப நோக்குவது போல, கண்டு எங்கும் சிவமயமாயிருக்கக் காண்பவனே சீவன்முத்தனாகின்றான்.

434. இன்பமேனும் துன்பமேனும் வந்த காலத்து நகுதலின்றியும் நலிதலின்றியும் எவன் சலனமின்றிச் சித்த சுத்த நிலையிலிருக்கின்றானோ அவன் சீவன்முத்தன்.

435. எவன் அகம் புறம் என்ற பேதமின்றி எங்கும் பிரமானந்தத்தி னின்பிற் றிளைக்கின்றானோ அவனே சீவன்முத்தன்.

436. யான் எனது என்ற அகங்காரமமகாரங்களற்றுத் தேகாபிமானமாதியவற்றை நீக்கி



எங்கெழிலென் ஞாயிறெற்றாலெங்கு வாழ்பவன் எவனோ அவனே சீவன்முத்தன்.

437. கலைகள் பல கற்று அவற்றின் பயனாய் வரும் மனத்தூய்மை, உள்ளத்துறவு, கருணை முதலிய நல்லமைதிகளைப் பெற்றுத் தானும் பிரமமும் ஒன்றெனக் கண்டு பாசத்தளையின் பிணிப்பை நீக்குகின்றான் எவனோ அவனே சீவன் முத்தன்.

438. ஐம்புலன்களையேனும் தேகத்தையேனும் நான் எனவும், புறப்பொருட் செல்வங்களை எனதென்றேனும் அபிமானித்தலின்றி எவன் விளங்குகின்றானோ அவனே சீவன்முத்தன்.

439. உலகமும் பிரமமும் ஒன்றென்றும் சீவனும் பிரமமும் ஒன்றென்றும் எவன் காண்கின்றானோ அவனே சீவன்முத்தன்.

440. நல்லடியார் பூவோடு பூசனைபுரியினும், தீயோர் நலியப் புடைக்கினும் விருப்பு வெறுப்பற்றுக் கலங்காத சித்தமுடையவன் எவனோ அவனே சீவன்முத்தனாகின்றான்.

441. அலையெறிந்து கரைமோதும் ஆழியின்கண் ஆற்றுநீர் சென்றால் அவ்வாழி அதனால் ஒருவித வேறுபாடுமின்றி விளங்கும். அதுபோல, பிரமத்தியானமாகிய பேரின்பத்தில் மூழ்கி விளங்கும் போது ஐம்புலச் சேட்டைகள் வந்து தாக்கினும் அலையாது நிற்பவனே சீவன்முத்தன்.

442. பிரமஞானம் பெற்றவனை இந்திரியங்கள் மயக்கமாட்டா. அவ்வாறு அவற்றால் தாக்குண்டானேயானால் அவன் உண்மை ஞானியல்லவென்க.

443. அன்றியும் காயம் பொதிந்த பாண்டத்திலே காயம் இல்லாத காலத்தும் அதன் வாசனை கமழுமன்றோ! அதுபோல அவன் ஞானியேயானால் பூர்வ வினையின் வாசனாவேகத்தாலின்னும் உலகப்பற்றை முற்று யறுத்துக்கொள்ள முடியவில்லையே யெனின், அறியாது கூறினாய்! பிரமத்தைக் கண்டு அதன் இன்பில் திளைத்தவனுக்குப், பின் ஆசைகள் பயனற்றழிவனவன்றோ? மட்பாண்டம் வனையுங்காலத்துச் சுழன்ற சக்கரம், குயவன் மண்ணைக் கொடுத்து வனையாதவிடத்தும் அதன் வேகத்தாற் சுழன்றுவரும். அச்சுழற்சியால் யாதும் பயனுளதோ? அதுபோலாமென்க.

444. ஒரு தூர்த்தனின் தீய குணங்களெல்லாம் அவனை யீன்றாளின் திருமுன்பே வலியற்றுப் போகின்றன வன்றோ? அதுபோலப் பிரமத்தோடுடன் வாழும் பெருவாழ்வு பெற்றவனும் உலகப் பற்றுக்களால் தாக்கப்படமாட்டான்.

## பிராரத்துவ விசாரணை

445. பிரமமயமாயிருந்து சிவோகம் பாவனை செய்யும் ஞானி ஏனையோர் போல உண்டு முறங்கியும் உபதேசஞ் செய்தும் திரிகின்றானோவெனின், ஆம். பிராரத்துவ வினையாகிய மட்பாண்டம் உடையும்வரை இவ்வாறு தாமரையில் நீர்போற் பற்றற்று நிலவுவன்.

446. காரணமின்றிக் காரியமில்லாதவாறு போல, இன்ப துன்பங்களாகிய காரியங்கள் நிகழுந்தோறும் இவற்றின் காரணமாகிய வினை உண்டென்பது துண்மை.

447. கனவின் கண்ணே நிகழ்வனவெல்லாம் நனவின்கட் பயனற்றழிவதுபோல, யுகங்கள் தோறுஞ் செய்து கட்டுப்பட்ட சஞ்சிதவினைகள் ஞானியைத் தாக்கமாட்டாவாய் அழிகின்றன.

448. கனவின்கண் ஒருவன் செய்யும் நன்மையோ தீமையோ விழித்தபின் அவனை நரகத்திற்கோ சுவர்க்கத்திற்கோ செலுத்த ஏதுக்களாக வருவனவோ?

449. பற்றற்ற பிரமத்தினிடையே பற்றுள்ள ஒருவனுக்கு அவன் இன்னுஞ் செய்யாது செய்யக்கிடக்கும் வினைகளும் பயன்தர வல்லனவல்ல.

450. குடத்தின் கண்ணேயுள்ள மதுவின் மணத்தால் ஆகாயத்திற்கோர் ஊனம் வருமாறில்லை. அதுபோல, பிரமத்திற்கும் வெளித்தோற்றங்களாகிய கட்டுக்களுக்கும் சம்பந்தமின்மையைக் கண்டுகொள்.

451. மெய்யுணர் வுதிக்கமுன் உண்டான தேகத்தைத் தந்த வினை ஒரு பொருளைக் குறிக்கோளாக்கி அதனிடை யெறியப்பட்ட அம்பு போல அதன் பயனை ஊட்டாது விடமாட்டாது.

452. புலியென நினைத்து அதனைக் கொல்வான் வேண்டி யெறியப்பட்ட அம்பை அப்பொருள் புலியன்று அதுவோர் பசுவேயெனக் காணப்பட்டவுடன் அவ்வம்பின் வேகத்தைத் தடுத்து மீளுமாறு செய்ய முடியாது. அது தன்னிலக்கை நோக்கி அப்பொருண்மேற் பாய்ந் தூடுருவிச் செல்லுமன்றோ?

453. பிராரத்துவ வினையின் பயனாக வருவனவற்றை ஞானிக்கும் தடுக்கமுடியாது. அவ்வினைப் பயனைப் புசித்தே யொழிக்கவேண்டும். ஆனால் சஞ்சிதமாகக் கட்டுப்பட்டுக்கிடப்பனவும் ஆகாமியமாக வருவனவுமான வினைகள் ஞானக்கினியிற்றகிக்கப்பட்டு வறுத்த வித்துப்போற் பயன் தரமாட்டா. பிரமமயமாய் அதன்தியானத்தில் மூழ்கிக்கிடக்கும் ஞானிக்கு இவ் வினைகளால் வரு மின்னல்களில்லை.

454, உறக்கத்திற் கண்டவற்றின் தொடர்பு விழித்தபோதும் பற்றிவராதது போலப் பிரமத்தியானத்தில் மூழ்கியிருப்பவனுக்கு வினைப்பயனைப் பற்றிய எண்ணம் எழுவதில்லை.

455. உறக்கத்தினின்றும் விழித்த ஒருவன் தான் உறக்கத்தின்கண் பூண்ட தேகத்தை "நான்" எனவும் ஆங்குக்கண்ட பொருள்களை "எனது" எனவும் கூறமுடியாது தான் வேறாக நிற்பன்.

456. அங்குக்கண்ட பொருள்களை உறுதிப்படுத்தவேனும் அன்றி அந்த உலகத்தை நிலை நாட்டவேனும் முடியாது. அன்றி அப்பொருள்களை மெய்யெனக்கொண்டு மயங்கினனேல் அவன் உறக்கத்தினின்றும் விழித்தானல்லன்.



457. அவ்வாறே பிரமத்தில் மூழ்கியவனும் அந்தப் பிரமத்தோடொன்றி அதனை யன்றி வேறொன்றையுங் காண்கிலன். கனவிடைத்தோன்றியவற்றின் எண்ணம் நனவின் கண்ணும் நிற்பதொப்ப, ஞானிக்கும் உண்டி உறக்கமெல்லாம் எண்ண மாத்திரையேயாம்.

458. வினைப்பயனாகத்தேகம் வந்ததாதலின் அதற்குப் பிராரத்துவ வினையும் உண்டெனக் கொள்ளலாம். ஆனால், பிரமத்திற்கு அவ்வாறு கூறமுடியாது. அது வினையின் பயனாக வந்ததொன்றல்ல.

459. உண்மை வாக்கியங்களாகிய வேதங்கள் பிரமம், இறப்புப் பிறப்பற்றதெனக் கூறுகின்றன. ஆதலின் அதனோடொன்றி நிற்கும் ஆன்மாவுக்கும்பிராரத்துவவினையை எவ்வாறேற்றலாம்?

460. தேகாபிமானம் உள்ளவரையே பிராரத்துவமும் உண்டு. மெய்யுணர்வு பெற்றஞானி தேகாபிமானத்தோடுவாழ்தலை நாம் காண்கிலம். ஆதலின் பிராரத்துவவினை அவனையணுகமாட்டாது.

461. இம்மட்டோ !! தேகத்துக்குத்தானும் பிராரத்துவவினையை ஒட்டிப் பேசுதல் ஒரு

மயக்கமேயாம். மனோசங்கற்பத்தால் பேசும் ஒன்றுக்கு எவ்வாறு இருப்பிடமுண்டு? அவ்வாறு சங்கற்ப மாத்திரையான தொன்றிற்கு உற்பத்தி யேது? உற்பத்தி யொன்றில்லாதது நாசமடைவ தெங்ஙனம்? ஆதலின், இல் பொருளாகிய ஒன் றினைப் பிராரத்துவம் தாக்குமாறெங்ஙனம்?

462. அஞ்ஞானமும் அதன் காரியங்களும் மெய் யுணர்வுதித்தவுடன் அழிந்து போவனவன்றோ? அற்றாயின், பின் ஞானிக்குத் தேகந்தான் எவ் வாறு நிலைபெறுமோ என ஆசங்கை நிகழ்த்தும் அறிவிலாரைத் தெருட்டும் வண்ணமே பிராரத் துவம் என ஒன்றை உள்பொருளென வேதங்கள் கூறுகின்றன. இதுவன்றி ஞானியின் தேகத்தின் பகுப்புக்களைப் பற்றிக் கூறும் பொருட்டல்ல.

## பன்மையை நிராகரித்தல்

463. பிரமம் ஒன்றேயுண்டு. அது ஆதியந்த மற்றது. அளவுகடந்தது, சோதிமயமானது. அது வன்றி வேறொன்றில்லை.

464. அறிவானந்தமயமாய, தனக்கென ஒரு செயலற்றதாயுள்ள பிரமம் ஒன்றேயுண்டு.

465. எப்பொருட்குமுள்ளாய, புறம்பாய உடனாயுள்ள பிரமம் ஒன்றேயுண்டு.

466. எல்லாமாய், தனக்கோர் சார்பில்லா ததாய் உள்ள பிரமம் ஒன்றே!

467. குணங்குறி கடந்ததாய், ஏகனாய், மல ரகிதனாயுள்ள பிரமம் ஒன்றே.



468. மனத்தாலறிய முடியாததாய் வாக்கு மனாதீதமாயுள்ள பிரமம் ஒன்றே.

469. உண்மைப் பொருளாய், சோதிரூபமாய் ஒப்புயர்வற்றதான பிரமம் ஒன்றே.

## ஆன்மானுபவம்

470. உலகப்பற்றெலாம் விட்டு ஐம்புலச் சேட்டைகளை நீக்கிச் சாந்தமடைந்த பெருந்தவர் தமது தியானத்தா லிந்தப் பிரமத்தைக்கண்டு தரிசித்துப் பின் தேகம் நீங்கிய காலத்துப் பிர மானந்தப் பேறாகிய விதேகமுத்தியடைகின்றார் கள்.

471. அன்பனே! நீயும் இவ்வாறு இந்த உண்மையைக்கண்டு, மனதிலே யுண்டான மயக் கத்தை நீக்கித் துவிதபாவனையாகிய இருளைக் களைந்து ஒளிப்பிழம்பாகி உன் பிறப்பாலாம் பய னைப் பெறமுயன்றுகொள்.

472. மனச்சாந்தம் பெற்ற சமாதி நிலை கைகூடி உண்மையான ஞானமாகிய அகக்கண்ணா லுண்மைப்பொருளைக் கண்டுகொள். சமாதி நிலை யிலே வேதங்கள் முழங்குகின்ற 'தத்துவமசி' என்ற வாக்கியத்தின் உண்மையை நீ குருவினிடங் கேட்டவாறே சிந்தித்துத் தெளிந்தாயானால், பின் உன்னை ஐயத்திற் காளாக்குவன ஒன்று மில்லை.

473. மாயையை நூறிப் பிரமதரிசனம் செய் வதற்குச் சாட்சிகளாக வருவன வேதங்களும்,

அவற்றைத் தீரவிசாரித்துத் தெளிதலும், ஆப்தனுன குரு உபதேசஞ்செய்த ஞானமொழிகளுமாம். இதுவன்றித் தான் சமாதிநிலை கைகூடப் பெற்ற அனுபவஞானமுமொன்றென்க.

474. பந்தமும் வீடும் ஆசையும் நோயும் பசியும் இன்பமுமாதியனவெல்லாம், ஒருவன் தானுகத் தன்னனுபவத்தில் காண்பதேயன்றிப் பிறராற்கூறப்படின், அது அனுமானவளவையாயே யிருக்கும்.

475. குரு உபதேசமும் வேத நூற்சான்றுக்ளும் மாணுக்கனுக்கு வெளியுபதேசங்களாம். தன்னனுபவத்தையோ அஞ்ஞானவிருளைக் கடந்து திருவருளின் துணை கைவரப்பெற்றுச் சமாதிநிலையில் தன்னகத்தே காண்கின்ருன்.

476. தன்னின் வேறல்லாத பிரமத்தை அனுபவத்திற்கண்டு முற்றுணர் வெய்தியவன் பின் தான்வேறு கடவுள் வேறென்ற எண்ணமின்றிப் பிரமமும் தாமும் ஒன்றேயென விளங்கக்கடவன்.

477. சீவனும் உலகமும் ஒன்றேயென்றும் வீடுபேறடைதல் சீவன் பிரமத்தோடைக்கியப் படுதலே யென்றும் வேதங்கள் கூறுகின்றன.

## உபதேசானுபவம் - ஞானவிழிப்பு

478. 479. என்று இவ்வாறெல்லாம் தன் நல்லாசிரியன் கூறிய ஞான மொழிகளை மனச் சோர்வின்றிக் கேட்டிருந்த மாணுக்கன் ஆசிரியர் கூறியவாறே மனதையடக்கிச் சாந்தனுகி ஞான



நிட்டை கைகூடிப் பிரமமும் தானும் ஒன்றேயென்ற அத்துவித நிலையையடைந்து பின் ஒருவாறு தன் பழைய நிலைக்கு வந்தவனுய், நிட்டை கலைந்து, ஆனந்த பரவசனுய்ப் பின்வருமாறு கூறுகின்ருன்:

480. மனமோ இறந்த தைய!
மற்றதன் செயல்கள் மாண்ட
இனையனென் றுரைக்க வொண்ணு
விறைவனும் நானு மொன்ரும்
தனிநிலை யடைந்தேன் பெற்ற
தண்ணருள் கணிக்க லாற்றேன்
அனையுமாய்த் தந்தை யாகி
யாண்டரு ளின்பத் தேவே

481. பிரமமும் அமுதை யொத்தே
பிரிவிலாத் தன்மைத் தாகி
யருவியிற் கருணை வாரி
யடங்கிடும் யானுங் கூட
வருவதா மின்ப மாட்சி
வாக்கினுற் கூறற் காற்றேன்
உருகிய மனமு மின்பத்
துயர்மண முணர்கின் றேனுல்

482. உலகினைக் கரந்தா ருண்டோ!
ஓடியே மறைந்த துண்டோ
நிலவிடா திற்ற கொல்லோ
நின்றதாற் கண்ணின் முன்னே
அலகிலா விளையாட் டோதா
னதிசய மதனி னுண்டோ
நலமெலாந் திரண்ட ஞான
நாதனே நவில்வா யையா!

483\. ஆனந்த மாய தேவ
அமுதெழு வாரி புக்கின்
ஊனமென் ஞெருதுக் கவுண்டோ
உயர்வுதாழ் வுரைக்க லாமோ
தானுமப் பரமு மொன்ருந்
தனிநிலை திளைத்த தல்லால்
நானெனப் பிரம மென்ன
நவின்றிட வொண்ணு மோதான்.

484\. இந்நிலை யிருந்த காலை
யிவ்வுல கிறந்த தென்கண்
தஞ்செய லற்ற சாது
தமியனு மொன்றுந் தேரேன்
விஞ்சிய இன்ப மாகி
விளங்கிடும் பரத்தை யன்றி
யெஞ்சிய தொன்றுங் காணேன்
இறைவநீ வாழி யூழி.

485\. முத்தனே போற்றி மேலாம்
முதல்வனே போற்றி ஞானத்
தொத்தனே போற்றி வேருே
ரொப்பிலா மணியே போற்றி
கத்தனே போற்றி நாயேன்
கருணையங் கடலே போற்றி
அத்தனே போற்றி யென்றே
அழுதழு தறைவா னின்னும்.



486\. பற்றிலாப் பரனே போற்றி
பகரொணு மேன்மைத் தாய
சிற்பர முணர்த்தி யெற்குச்
செம்பத மீந்தாய் போற்றி
சுற்றமுந் துன்பும் நோயும்
சுழற்றிய வெம்மை நீக்கக்
கற்றையங் கிரணம் வீசுங்
கலைமதிக் கருணை போற்றி.

487\. இப்பிறப் பெடுத்த பேற்றை
யின்றியா னடைந்தே னையா
வெப்புறு பிறப்பி றப்பாம்
வினைவிலங் கறுத்தேன் வேறு
தப்புறு நெறியிற் சேரேன்
தனிமுதற் பரமு மானேன்
ஒப்பிலா மணியே யெல்லாம்
உன்னருள் நோக்கா லன்ருே?

488\. ஐயனே! யான் பந்தத் தொடர் பற்றேன்; புனிதனுனேன்.

489\. யான் செய்பவனுமல்லன். யானவற்றைக் கடந்த நிலையாய அறிவானந்தனுய் விளங்குகின்றேன்.

490\. நான் காண்பானுமல்லன்; கேட்பானுமல்லன்; பேசுபவனுமல்லன்; அனுபவிப்பவனுமல்லன். நான் அறிவுக்கறிவாயுள்ளவன்; நித்தியன்; இடையீடற்றவன். விவகாரங்களுக்கு அதீதன். எல்லையற்றவன்; பற்றற்றவன்; அகண்டன்.

491. நான் முன்னிலைப் பொருளுமல்லன்; படர்க்கைப் பொருளுமல்லன். ஆனால், இவை யிரண்டையும் பிரகாசிக்கச் செய்பவன்; நானே பிரமம், என்னையன்றி வேறொரு பொருளில்லை; நான் தூயன்; அகம்புறமற்றவன்; எல்லை யற்றவன்.

492. ஏகபரிபூரணனாய், ஒப்பற்றவனாய், ஆதியந்தமற்ற மெய்ப்பொருளாய், "நீ" "நான்" "இது" "அது" என்னுஞ் சங்கற்பங்களுக்கதீதனாய், சச்சிதானந்த சொரூபனாயுள்ளம் பிரம நானே,

493. நரகாசூரனையட்ட நாராயணனும் நானே. திரிபுரதகனத் தேவனும் நானே. யான் எனதென்ற செருக்கறுத்த இறைவனும் நானே.

494. எங்கும் அறிவுருவாய் விளங்குபவன் யானே.

495. எல்லையில்லாத ஆனந்தமாகடலாகிய என்னினின்றே திரைகளாகிய இவ்வுலகம் தோற்றி மாயையாகிய காற்றாலடித் தொதுக்கப்படு கின்றது.

496. வகுக்கப்படாத காலத்திற்கு ஒரு மாதம், மணி என எல்லை வகுத்தவாறுபோல உபாதிகளாற் றொக்குண்டபின், சங்கற்பத்தினால் யான் தேகமென்றும் உலகமென்றும் எண்ணப் பட்டேன்.

497. அறிவிலார் கூறினும் அவர் கூற்றால் மூலகாரணமான எனக்கோர் விகாரமுமில்லை கானலிடத்தே காணப்படும் நீரோட்டம் வனாந் தரத்தை நனைத்ததோ?



498. நான் ஆகாயம்போற் றூய்மையுடை யவன். ஒளியெனும் பொருளாகாது ஒளிரூப மாயுள்ளவன்; சலனமற்றவன்; கடல்போற் பரந்தவன்.

499. ஆகாயத்திற்கும் மேகத்திற்கும் உற வில்லாதது போல எனக்கும் தேகத்திற்கும் உற வில்லை.

500. உபாதிகளே போக்கு வரவு புரிவன. யான் குலபர்வதம் போற் சலனமற்றவன்.

501. விகாரப்படாது என்றும் ஒரே படித்தா யிருக்கும் யான் தொழில் புரிவதுமில்லை; புரியா திருப்பதுமில்லை.

502. இந்திரியங்களின் சார்பின்றி நாம பேதரூபங்களின்றி விளங்கும் ஆனந்தனான எனக்குப் பாவ புண்ணியங்களில்லை.

503. ஒருவனின் நிழலை நெருப்போ நீரோ தொட்டால், நிழலின் வேறான தேகத்திற் கதனா லெய்தும் இன்னலில்லையாம்.

504. ஓர் அறையின் கண்ணே விளக்கெரியுங் கால் அவ்வறையிலுள்ளமணத்தையோ நிறத் தையோ அது பற்றாதவாறு போலச் சாட்சியா யிருப்பவனை அவன் பார்க்கும் பொருட்பேதங் கள் பற்றா.

505. சூரியப்பிரகாசத்தில் நன்மை தீமைகளை மனிதர் செய்யின் அவற்றின் பலாபலன் சூரியனைத்

தாக்குமோ? கயிறு பாம்பெனச் சங்கற்பிக்கப்பட்டாலும் அது பாம்பாகுமோ? அது போல யானும் விளங்குகின்றேன்.

506. ஐந்து பேரறிவாலு மளப்பரும் பொருளாய்ச் செயலற்று விளங்கும் பொருள் யான்.

507. புத்தி தத்துவத்திலே விளங்கும் சோதியினின்று நான் செய்கின்றேன் எனப் புத்தி தத்துவத்தையும் ஆன்மாவையும் ஒன்றெனக் கூறினும் நீரிலே காணும் சூரியன் நீரலையுங்கால் அலைதலை யொக்கினும் உண்மையில் அலைகின்ருனே? அல்லவே. அவ்வாறே யானும் விளங்குகின்றேன்.

508. இந்தத் தேகம் நீரிலேனும் நிலத்திலேனும் வீழினும் வீழ்க. அதனால் யான் பாதிக்கப் படமாட்டேன். குடாகாயம் குடம் உடைந்தவழியும் உடையாதவழியு மொன்ருதல் போல் என்க.

509. சோம்பல், மைதுனம் ஆதிக் குணங்கள் என்னைப் பந்திக்கமாட்டா.

510. கர்த்தாவாயிருத்தல், போக்தாவாயிருத்தல், துட்டனுயிருத்தல், மதி மயங்கியிருத்தல், சடம் போலிருத்தல், கட்டுப்பட்டிருத்தல், விடுபட்டிருத்தல் முதலியனவெல்லாம் புத்தியின் விபரீத கற்பனைகள்; உண்மையில் தனிப்பட்டவனும், இரண்டற்றவனும், பரப்பிரமமாகிய தன்னிடத்தில் அவை இல்லவேயில்லை.



511. பிரகிருதியின் மாறுதல்கள் பத்தாயோ, நூருயோ ஆயிரக்கணக்காயோ இருக்கலாம். பற்றற்ற அறிவே வடிவாயிருக்கும் எனக்கு அதனுலென்ன? மேகம் ஆகாயத்தை ஒருபோதும் தொடாது. அவ்வாறே நான் எதனுலும் பற்றப்படாதவன்.

512. அவ்வியக்தம் முதல் தூலம் வரை இவ்வுலகம் எதனிடம் தோற்ற வடிவில் மட்டும் காணப்படுகிறதோ, எது ஆகாயத்தைப் போல நுட்பமானதோ, அடிமுடியற்றதோ அந்த இரண்டற்ற பிரமமாகவே நான் இருக்கின்றேன்.

513. அனைத்துக்கும் ஆதாரமாயும் எல்லாப் பொருள்களையும் பிரகாசிப்பதாயும், அனைத்தின் வடிவாயும், எங்கும் நிறைந்ததாயும், குணம் குறி முதலிய அனைத்தும் அற்றதாயும், என்று முளதாயும், பரிசுத்தமாயும், அசைவற்றதாயும், கற்பனைகளைக் கடந்ததாயும், இரண்டற்றதாயுமுள்ள பிரமம் எதுவோ அதுவாகவே நான் இருக்கின்றேன்.

514. எது மாயையின் வேறுபாடனைத்தையும் கடந்ததோ, உயிர்கட்கெல்லாம் உயிரோ, மனத்தின் எண்ணங்கட் கெட்டாததோ, சத்தியமாயும், ஞானமாயும், எல்லையற்றதாயும், ஆனந்த வடிவாயுமுள்ளதோ, இரண்டற்ற பிரமமோ அது வாகவே நான் இருக்கின்றேன்.

515. நான் செயலற்றவன், மாறுதலற்றவன், பின்னப்படாதவன், வடிவற்றவன், கற்பனைகளை

யும் கடந்தவன், என்றுமுள்ளவன், தொடர்பற்றவன், இரண்டற்றவன்.

516. நான் அனைத்துக்கும் ஆத்மா, நானே அனைத்தும். நான் அனைத்தையும் கடந்தவன், இரண்டற்றவன், அறிவே உருவானவன், எல்லையற்ற ஆனந்த வடிவினன்.

517. இவ்வாருய சிறப்பை எய்தியதும் உமது கிருபா நோக்காலன்றோ? தங்களுக்கு அடியேன் மீளா வணக்கம்.

518. அறியாமையாகிய நித்திரையிற் கிடந்தேனை ஐயனே தாங்கள் தங்க ளருள் நோக்காற் றுயிலெழுப்பி, பிறப்பிறப்பாகிய காட்டிலே அளவற்ற இடர்களாலும் அபிமானப் புலியாலும் நலிந்தேனைக் காத்தாட்கொண்டீர்.

519. வாக்கு மனுதீதனுய், நித்தியனுய்ப் பிரபஞ்சமும் மற்றல்லதுமாய் திரிமூர்த்திகளுமாயிருக்கின்ற கடவுளே! வணக்கம்.

## உபதேச முடிவு

520. இவ்வாறு அடிவீழ்ந்து உண்மையுணர் வெய்திய மாணுக்கன் பரவசனுய் நின்று கூறும் இம்மொழிகளைக் கேட்டு மகிழ்ந்தவராய்க் குரு கூறுவார்.

521. இந்த உலகத்திலே காணப்படுவன யாவையோ அவை யெல்லாம் பிரமம். களங்கமற்ற உனது மனதின்கண்ணே அகக் கண்ணொளியால் பார். புறக்கட் பார்வையால் மனிதர் தம்மைச் சுற்றிப் பார்ப்பனவெல்லாம் ஒவ்வோர் வடிவங்களையேயன்றே? அது போல, ஞானி எங்குப் பார்க்கினும் பிரமத்தையன்றி வேறு காண்கிலன்.



522. மெய்ப்பொருளான பிரமானந்தத்தை வெறுத்து எவன் நித்திய உலகவின்பில் நாட்டம் வைப்பான்? தண்ணென்ற நிலவுகாலும் மதியை நீக்கித் துகிலிகையாற் புனைந்த கலைமதியை மதிப்பாருண்டோ?

523. உலக வியாபாரங்களில் மூழ்கியவன் அவாவறுத்துப் பிறவித்துயர் கடப்பானல்லன். ஆதலின் பிரமத்தியானஞ் செய்து அதனின்பத்தி லென்றும் மூழ்கியிருப்பாயாக.

524. எங்கும் பிரமத்தையே கண்டு பிரமத்தியானத்திலே மூழ்கி உன் காலத்தைக் கழிப்பாயாக.

525. நீ வேறு பிரமம் வேறு என்ற எண்ணமோ ஆகாயத்தில் கோட்டை கட்டுதலையொக்கும். நீயே பிரமம் என்ற திடசித்தனுகிச் சாந்தநிலை யெய்தி எல்லாம் பிரமத்தின் செயலே என எண்ணியிருப்பாய்.

526. கொம்பர்தோறுங் குதித்தோடுங் குணங்கொண்ட குரங்கனைய மனம், பிரமதெரிசனஞ் செய்து அதனுடொன்றிக் கிடக்கும் ஞானிக்கே யடங்கிக் கிடக்கும். இந்நிலையே சமாதிநிலை. இதுவே ஞானிக ளின்பநிலை.

527. தன்னையறிந்து தலைவனுடன் கூடி இன்பமெய்திக் கிடக்குமொருவனுக்கு அவ்வாறிருந்தவிடத் துண்டாகுஞ் சாந்த நிலையினும் மேலானதொரு நிலையில்லை.

528. மெய்யுணர்வு கைவரப்பெற்ற ஞானி, நிற்கினும் கிடப்பினும் எத்தொழிலைச் செய்யினும் ஏதவத்தைப் படினும் நலியாது மோனத்தேயிருப்பன்.

529. ஞானிக்கு இரவு பகலென்றும் கிழக்கு மேற்கென்றும் இயமம் நியமம் ஆதிக் கிரியைகள் என்றும் கூறப்படும் கட்டுக்களில்லை. தன்னைப் பிரமத்தோடொன்றச்செய் தின்புறுதற்குக் காலம் இடம் ஆதிக் கட்டளைகள் வேண்டுமோ?

530. மண்ணாலாய குடத்தை மட்குடமென்னக் கண்பார்வை யன்றி வேறு ஏதுக்களும் வேண்டுமோ?

531. அவ்வாறே மெய்யுணர்வு கைவந்தவுடன் ஆன்மாவும் பிரமமாய் விளங்கும். வேறு காலம் இடம் வேண்டா.

532. "நான்தான் சாத்தான்" என்று கூற இடம் பொருள் காலம் வேண்டா. பிரமதெரிசனஞ் செய்தவனுக்கு "நானே பிரமம்" எனக் கூற வேறேதுக்கள் வேண்டா.

533. சூரியனைப் போலச் சோதிரூபமாயிருந்து சரம் அசரமாகிய பிரபஞ்சத்தை விளக்கிநிற்குமொன்றை விளக்குவதற்கு வேறொன்றுண்டோ?



534. வேதாகமங்களுக்கும் ஏனைத் தத்துவப் பொருள்களுக்கும் உட்பொருளாய எல்லாமாய் விளங்குமொன்றிற்கு வேறு ஒளி கொடுப்பாருண்டோ?

535. சுயம்பிரகாசமான பிரமம் இவ்வாறு அகண்டிதமா யிருப்பினும் வணங்குவார்க் கருள்புரியு மெளியனுமா யிருக்கின்றான். அதை அறிந்தே ஞானி பாசத்தை நீக்கி இன்ப வாழ்விற் றிளைக்கின்றான்.

536. பேரின்பத்திற் றிளைப்பவனாதலின் ஞானி புறப்பொருள்களின் பற்றால் தாக்குண்ணப்படமாட்டான். விருப்பு வெறுப்படையான். என்றும் இன்பமயமாயிருப்பான்.

537. தேகத்தின் சிரமத்தையாவது பசியின் கொடுமையையாவது நோக்காது, ஒரு சிறுபிள்ளை தன் விளையாட்டுப் பொருள்களோடு நெடுநேரம் விளையாடும். ஞானியும் நான் எனது என்ற அபிமானக் கயிற்றாற் றாக்கப்படாது உண்மையான பிரமத்தோடு விளையாடி இருப்பன்.

538. ஞானிக்கு ஓடே வற்றாத பாத்திரம். வீடு சுடுகாடு. உடை கந்தை. படுக்கை பூமி. வேதாந்த வீடே விளையாட்டு நிலம். விளையாட்டு பிரமத்தியானமாம்.

539. தான் ஒரு பிரமஞானி எனப் பகுத்துக் காட்டும் வேடமின்றியும், தான் உலகைத் துறந்தவன் எனக் காட்டா துடனுறைந்தும் திரியும்

ஞானி, பிராரத்துவ வினைப்போகமாக வருவன வற்றையுண்டு உடுத்தும், உண்மை அடியார் வேண்டு மின்மொழிகளுக் கிரங்கி அவர் ஈவதை உண்டும், விருப்பு வெறுப்பின்றிப் பாலர் தன்மை பூண்டும் இருப்பன்.

540. பிரமத் தியானத்தி லீடுபட்டுத் தன்னை மறந்த ஞானி, உன்மத்தன் போன்றும், பாலனைப் போன்றும், கௌபீனம் மாத்திரம் உடுத்தும், தோலாடை சுற்றியும், அழுக்குக்கந்தை தரித்தும், தான் செய்வது யாதெனத் தெரியாதானாய்த் திரிவான்.

541 வேண்டுதல் வேண்டாமை யென்னு மிரு நிலையுமற்று எங்கும் பிரமத்தையே கண்டு, புறப் பொருள்களை யெல்லாம் பிரமமாக எண்ணித் திரிவன்.

542. ஒரு மடவோனைப் போலவும், அறிவாளி யைப் போலவும், அரசனைப் போலவும் அலைந்தும், அசைவற்றுக் கிடந்தும், வணங்கப்பட்டும், இகழப்பட்டும், இவற்றால் தானிவ்வாறு நாத்திகம் பேசப்படுகின்றானே யென்ற எண்ணமின்றியும், சதா பிர ்த்தியானத்தில் மூழ்கியிருப்பன்.

543. பணமின்றிப் பாக்கியவானாகவும், தனித் திருந்தும் தணிப்பரும் ஆற்றலுள்ளவனாயும், புறப்பொருள்களின் பற்றிலனாயினும் என்றும் குறைவற்ற மனத்தையுடையவனாகியும் தன்னின் ஒப்பாரின்றேனும் தானும் பிறரும் ஒன்றெனக் கண்டுந் திரிவான்,



544. தொழில் புரிந்தும் தனக்கென வொன் றின்றியும் பழவினைப் பயனாய் வருவனவற்றைப் புசிக்குங்கால் விருப்புவெறுப்பின்றியும் தேகமிருந் தும் அதனபிமான மின்றியுந் திரிவான்.

545. இந்த ஞானியை நன்மை தீமை இன்ப துன்பங்கள் நலியா.

546. இன்பமுந் துன்பமும் நன்மையுந் தீமை யும் தேகாபிமானியையே வாட்டுவன. பிரமதெரி சனஞ் செய்து பந்தத் தளையறுத்தவனை இப்பந் தங்கள் பந்திக்குமா றெங்ஙனம் ?

547. இராகு வென்னும் பாம்பால் விழுங்கப் பட்டதெனக் கூறப்படும் சூரியனானது அவ்வாறு விழுங்கப்படாததொன்றெனினும், மயக்கமான அறிவுள்ளவரால் அவ்வாறு கூறப்படுகின்றது. அவர்களுக்குச் சூரியனின் மெய்யியல்பு விளங்க வில்லை யன்றோ ?

548. அதுபோலப் பிரமதெரிசனத்தில் மூழ்கிக் கிடக்கும் ஞானி தேகத்தோடிருக்கும்போது அவர் பெருமை அறியாரால் அவர் தேகாபிமானி எனப் படுவர்.

549. உண்மையில் ஞானிக்குத் தேகம் ஒரு பாம்பின் தோல் போன்றிருக்கின்றது. பிராண வாயுவின் வேகத்தால் அவன் சரீரம் அங்குமிங்கும் அசைகின்றது.

550. வெள்ளப் பெருக்கிடைப்பட்ட விறகுத் துண்டு பள்ளத்திற்கோ அன்றி மேட்டு நிலத்

திற்கோ செலுத்தப்படுமாறுபோல ஞானியின் தேகமும் பிராரத்துவ வினையின் வேகத்தினளவுக் கேற்ப இன்ப துன்பங்களிற் படும்.

551. தேகாபிமானமற்ற ஞானி அபிமானம் பூண்டான் ஒருவனைப் போலப் புறப் பொருள்களைத் துய்த்துத் திரிவன். ஆனால் அவன் நிலையோ குலாலன் சக்கரத்தின் நாப்பண் பூட்டப்பட்ட ஆணிபோலத் தன்னைச் சுற்றியனவெல்லாங் கறங்குபோற் சுழலினும் தான் சுழலானாகிச் சாட்சி மாத்திரையின் உலகைப் பார்த்திருப்பன்.

552. அவன் புலன்கள் வழியே செல்வானல்லன். புலன்களை அடக்குவானுமல்லன். காணாதேகண்டு, கேளாதே கேட்டு, சுவைக்காதே சுவைத்துத் தூங்காதே தூங்கியிருப்பன்.

553. தூக்கத்திலே ஒரு குழந்தையின் கையிலுள்ள பொருள் குழந்தையின் நினைவின்றிக் கீழே விழுமாறுபோலச் சாதனை முதலியவற்றை விட்டுப் பிரமத் தியானத்திலே மூழ்கியவன் சிவனேயாகின்றான்.

554. இவ்வாறு உலகை நீத்துச் சிவமாந் தன்மையடைந்த ஞானி உலகினர் போல நடித்தாலும் தான் எண்ணிய இன்பத்தையே பெறுவான்.

555. ஒருவன் கழைக்கூத்தாடி வேடம் போட்டு நடிக்குங்காலும் அவ்வேடம் கழற்றிய பின்னும் மனிதனேயன்றி வேறல்லன். அதுபோலப் பிரமஞானியும் உலகத்தோடு உடனுறைந்தாலும் பிரமஞானியேயாம்.



556. பிரமஞானியின் தேகமோ ஞானக்கினியில் தகிக்கப்பட்டதாதலின் காய்ந்த சருகுபோல அஃது எங்கு எப்போது வீழினும் அவன் அதனால் தாக்கப்படமாட்டான்.

557. உண்மை ஞானி இந்த ஊத்தைப் பாண்டமான தேகத்தைப் போட்டுடைத்தற்குக் காலம் இடம் கணிக்க மாட்டான்.

558. தேகமும் யோகதண்டமும் துறத்தல் மாத்திரம்தான் வீடுபேறென்னலாமோ? அஞ்ஞானச் சிகையை அழித்தலே வீடுபேறும்.

559. ஒரு மரத்திற்கு அதன் இலையானது ஆற்றில் விழுந்தாலென்? குளத்தில் விழுந்தாலென்? கோயிலில் விழுந்தாலென்? ஆம்பயனென்னே?

560. அதுபோல, மனம், புத்தி, சித்தம் ஆதியனவறுதல் மரத்தின் இலை காய் பழம் உதிர்தலையொக்கும். பிந்தியவை மரத்தைப் பாதிக்காவாறு போல முந்தியவை பிரமத்தைப் பாதிக்கமாட்டா.

561. ஆத்மாவை ஆனந்த சொரூபியென்றும், அழியாப் பொருளென்றுங் கூறிய வேதங்கள் ஆத்மாவின் பிரதிவிம்பங்களாகப் புனைந்துரைக்கப்பட்ட குணங்களையழித்தல் வேண்டும் என முழங்குகின்றன.

562. ''என்றுமழியா வான்மாவேயிது'' என்ற வேதவாக்கியமும் ஆத்மாவின் நித்தியத்துவத்தை விளக்கும்.

563. கல், மரம், புல், நெல் மட்டையாதியன தீயிடைச் சுடப்பட்டபின் சாம்பராவது

போலத் தேகம் கரணம் முதலியன ஞானக்கினி யாற் சுடப்பட்டபின், பிரமமாக விளங்குனவாம்.

564. விளக்கின்முன் இருள் ஓடுதல் போலப் பிரமசைதன்யத்தி லெல்லா மடங்கிநிற்கும்.

565. குடமுடைந்துழிக் குடாகாயம் பேரா காயத்துடன் கலந்து விளங்குமாறுபோலப் பிரமத் தியானத்தில் மூழ்கியவனும் உபாதிகளற்றவிடத் துப் பிரமமாய் விளங்குவான்.

566. பாலோடு பாலும் நீரோடு நீரும் கலந் துழி, எவ்வாறு ஒன்றேயாய் விளங்குகின்றனவோ அவ்வாறே பிரமஞானியும் பிரமத்தோடு கலந் துழிப் பிரமமாகின்றான்.

567. இவ்வாறு தேக உபாதிகள் கழன்ற விடத்துதிக்கும் ஏகாந்தமாந் தன்மையின் பெரு மையை உணர்ந்து பிரமத்தோடுடனாய் மேவி. ஞானி பிறப்பிறப்பறுப்பன்.

568. அஞ்ஞானத்தால் வந்த காரண சூக்கும தூலதேகங்கள் பிரமாக்கினியாற் றகிக்கப்பட்ட பின், அவன் பிரமமேயாகின்றான்? பின் பிரமத் திற்கேது பிறப்பு ?

569. பந்தமும் வீடுபேறும் என்றவை யெல் லாம் மாயையின் புணர்ப்பே. உண்மையில் அவை ஆத்மாவினிடம் உள்ள குறைவும் நிறைவு மல்ல. கயிற்றினிடை எவ்வாறு பாம்பு தோன்றவு மில்லையோ மறையவுமில்லையோ அது போலாம்.

570. மாயையின் மறைப்பு உள்வழிப் பந்த மும், இல்வழி வீடுபேறும் உண்டெனக் கூறலாம். பிரமநிலை யடைந்த அவசரத்தில் பிரமத்தை மூடும் மறைப்பு இல்லையாதலின், அங்கு பந்தமும் வீடுபேறும் வேண்டா. அன்றி, இருப்பின் அத் துவிதமென்பது பொய்யாய் விடுமன்றோ ? வேதங் கள் துவிதமென எங்குங் கூறக் கண்டிலம்.



571. மேகங்களாற் கட்பார்வைக்குத் தெரி யாது மறைக்கப்பட்ட சூரியனைப் பார்த்து அறி வில்லார் மேகங்களாற் சூரியன் மறைக்கப்பட்டா னென்று கூறல் போலப் பந்தமும் வீடும் எல் லாம் புத்திதத்துவத்தின் குணங்களேயாம்.

572. பந்தமும் பந்தநீக்கமும் என்பதெல் லாம் புத்திதத்துவத்திலெழும் சங்கற்பமேயன் றிப் பிரமத்திற் கிவற்றாலோ ரிழுக்குமில்லை.

573. ஆதலின், இவை எல்லாம் மாயையின் செயலே, ஆத்மாவுக்கோ ரிழுக்கில்லை. பரந்த ஆகாயத்திற்கோர் குற்றமுமில்லாதவாறு போல ஏகனாய், மலரகிதனாயுள்ள பிரமத்திற்கு எவ்வாறு கட்டுக்கள் உண்டாகும் ?

574. இறப்புப் பிறப்பில்லை. சாதகன் முமுட்சுவென்றில்லை. எல்லாம் ஒன்றே. இதுவே உண்மை.

575. அன்பனே! இந்த அருமருந்தன்ன இரகசி யத்தின் உண்மைகளையெல்லாம் ஒரு தந்தை மக னுக்கு உரைப்பது போல அன்பினால் உனக்குப் பலதரம் விளக்கினேன். ஏனெனில், நீ ஆசையற் றவனாய், துர்க்குணங்களில்லாதவனாய், உண்மை யறிய நாடிய ஓர் சாதகனாதலினாலே யவ்வாறு செய்தேன் என்றறிந்து கொள்வாயாக.

576. ஆப்தனான குருநாதன் சொல்லிய நன்மொழிகளை மாணாக்கன் கேட்டு அன்பு நிறைந்தவனாய் ஆசாரியன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப் பந்த மறுத்தவனாய்த் தன்பதி யேகினான்.

577. ஆசாரியனும் தம் தியானத்தில் மூழ்கியவனாய் உயர்வு தாழ்வு என்ற பேதமகற்றி எவர்களேனும் தம்முன் வருபவர்களின் இருண்மயக்கத்தை நீக்கி நிலவினார்.

## நூலின் நால்வகை இலக்கணப் பூர்த்தி

578. இவ்வாறு வீடுபேற்றை விழையும் சாதகனுக்குச் சாதகமாக ஆத்மாவின் மெய்யியல்பு குருசீடசம்வாத முறையில் விளக்கப்பட்டது.

579. வீடுபேற்றை விழைந்தவர்களாய், இயமம் நியமமாதிச் செய்கைகளால் மனத் தூய்மையடைந்தவர்களாய் உலகப்பற்றைத் துறந்தவர்களாய், சாந்தராயுள்ள ஞானிகள் இந்நூலின் பெருமையைப் பாராட்டுவார்களாக.

## நூலின் சிறப்பு

580. பேராழி யிடைப்பட்டுப் பேரிடரின்
வயப்பட்டுப் பிறவியேற்றுத்
தீராத மிடியுந்தத் தெண்ணீரைக்
கானலிடைத் தேடுவார்போற்
சீரான நிலையில்லார் சிவஞானத்
தெள்ளமுதத் தேறல் மாந்தப்
பேராத காதலுடன் சங்கரனார்
பேசுமிந்நூல் பெரிதும் வாழி.

ஓம் தத் சத் ஓம்.

